# THE GOOD SISTER

BY

RAO BAHADUR P. SAMBANDAM, B.A., B.L.,

*Author of:*

The Two Sisters, Galava, The Eye of Love, The Curse of Urvasi, The Merchant of Vanipura, Fate and Love, Simhalanatha, Pushpavalli, Amaladitya, Magapathi, The Ideal Wife, Siruthondar, The Golden Fetters, True Love, The Bandit Chief, Bricks-Between, At Any Cost, The Fair Ghost, The Wedding of Valli, Brahmin *vs* Non-Brahmin, Vijayarangam, As you like it, Sati Sulochana, Lord Buddha, The Tragedy of Silence, The Good Fairy, Geetha manjari, The True Brother, Malävikagnimitra, Chandrahari, The Demon Land, Sabapathy Part I, The Pongal Feast or Sabapathy Part II, A Rehearsal or Sabapathy Part III, Sabapathy Part IV, Blessed in a Wife, The Dancing Girl, Subadra-Arjuna, Karna the Giver, Sahadeva's Stratagem, The Surgeon General's prescription, Vichu's Wife, Sakuntala, Vikramorvasi, The Point of View, The Two Selves, The Tragic Denouement, The Sub-Assistant Magistrate of Sultanpet, Harischandra, Blind Ambition, Markandeya, Sarangadhara, Manohara, The Two Friends, The Knavery of Kalappa, As We Sow-So We Reap, Over Forty Years Before the Footlights Parts I, II & III & IV, The Search, Prince Koneri, The Crowd in the Shandy, Ratnavali, The Gypsy Girl, Vaikunta Vaithiyar, Dikshithar Stories, Funny Stories. The Tamil Drama etc. in Tamil; and Harischandra, and Yayathi in English.

FIRST EDITION

Madras:

PRINTED BY THE PEERLESS PRESS,

15, LINGHI CHETTY STREET, G. T.

 1936 Price per Copy

# நல்லதங்காள்

ஒரு தமிழ் நாடகம்

ராவ் பஹதூர்

ப. சம்பந்த முதலியார், பி. ஏ., பி. எல்.,

அவர்களால் இயற்றப்பட்டது.

இந்நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்றத் தமிழ் நூல்கள்:—

லீலாவதி-சுலோசனை, சாரங்கதரன், மகபதி, காதலர் கண்கள், நற்குல தெய்வம், மனோஹரன், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், கள்வர் தலைவன், தாசிப்பெண், மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், காலவரிஷி, ரஜபுத்ரவீரன், உண்மையான சகோதரன், சதி-சுலோசனா, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, உத்தமபத்தினி, அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றாம் பாகம், சபாபதி நான்காம் பாகம், வள்ளிமணம், பேயல்ல பெண் மணியே, புத்த அவதாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனா, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து, மாளவிகாக்னிமித்ரம், விபரீதமான முடிவு, சுல்தான்பேட்டை சப் அசிஸ்டெண்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, காளப்பன் கள்ளத்தனம், விக்ரமோர்வசி, முற்பகற் செய்யின் பிற்பகல் விளையும், நாடகமேடை நினைவுகள் முதற்பாகம், இரண்டாம் பாகம், மூன்றாம் பாகம், நான்காம் பாகம், நாடகத் தமிழ், யயாதி, பிராம்மணனும் சூத்திரனும், வாணீபுரவணிகன், இரண்டு நண்பர்கள், சத்ருஜித், ஹரிச்சந்திரன், மார்க்கண்டேயர், ரத்னாவளி, கண்டு பிடித்தல், கோனேரி அரசகுமாரன், சந்தையிற் கூட்டம், குறமகள், வைகுண்ட வைத்தியர், தீட்சிதர் கதைகள், ஹாஸ்யக் கதைகள் முதலியன.

முதற் பதிப்பு

சென்னை 'பியர்லெஸ்' அச்சுக்கூடத்தில்
அச்சிடப்பட்டது.

1936

INSCRIBED

to

THE BELOVED MEMORY

of

MY PARENTS

**P. VIJIARANGA MUDALIAR**

and

**P. MANICKAVELU AMMAL**

and

MY FRIEND

**C. RANGAVADIVELU**

# PREFACE

Some time back, a friend of mine asked me to write a Scenario for a Tamil Talkie of the story of Nallathangal. After I sketched out the Scenes, he gave up the idea. After having spent some time in thinking out the plot, I thought I might as well write it as a drama; hence the present work.

I have made several changes in the story. I have given a new reason for the almost unnatural act of Nallathangal throwing all her children into a well. How far these changes would satisfy my readers, it is for them to judge.

As an Author's Copyright in his books lasts for his lifetime and 50 years after his death, persons desirous of staging this new version of the story of Nallathangal (as well as any other drama by me) will have to take my permission during my life-time, & thereafter for the statutory period that of my son P. Varadarajan and his heirs.

P. SAMBANDAM.

1st July 1936,
Pammal Lodge,
G.T., Madras.

# நல்ல தங்காள்

## நாடக பாத்திரங்கள்.

| | | |
|---|---|---|
| ராஜகேசரி | .... | ...காசிராஜன் |
| நல்லதம்பி | .... | ....மதுரை அரசன் |
| சத்யவாக் | .... | ...காசிராஜன் மந்திரி |
| சச்சிதானந்தர் | ... | ...ஒரு சன்யாசி |
| சேந்திலதிபதி | ... | ...அலங்காரியின் தம்பி |
| சுகுணசேகரன் முதலியோர் | | நல்லதங்காளின் மைந்தர்கள் |
| திண்ணை தூங்கி | | |
| எச்சில் பொறுக்கி | ... | சோம்பேறிகள் |
| தோண்ணை நக்கி | | |
| நல்லதங்காள் | ... | நல்லதம்பியின் தங்கை காசிராஜன் மனைவி |
| அலங்காரி | ... | ...நல்ல தம்பியின் மனைவி |
| கனகாம்புஜம் | ... | நல்லதம்பியின் மந்திரி குமாரி |
| திலகம் | | அலங்காரியின் |
| அமிர்தம் | ... | பாங்கிகள் |

ஒரு வேடன், ஒரு சிற்பி, சேவகர்கள், வேடர்கள், காசிவாசிகள், நல்லதம்பியின் பந்துக்கள், அலங்காரியின் பந்துக்கள் முதலியோர்.

கதை நிகழ் இடம்—காசியிலும், மதுரையிலும், இடைப் பிரதேசங்களிலும்.

# நல்லதங்காள்

## முதல் அங்கம்

### முதற் காட்சி

இடம்—காசி மன்னன் அரண்மனையில் சரஸ்வதி மஹால்.

காலம்—சாயங்காலம்.

காசிராஜன் பட்டு வஸ்திரங்களால் அலங்கரிக்கப்பட்ட மஞ்சத்தின் மீது சாய்ந்து கொண்டிருக்கிறார். தாதியர் வேலையாட்கள் புடை சூழ்ந்து நிற்கின்றனர். மந்திரி சத்யவாக் ஒரு பக்கமாய் நிற்கிறார். பல சங்கீத வித்வான்கள் வீணை முதலியன வாசித்துப் பரிசு பெற்றுப் போகின்றனர்.

கா. மந்திரி, இம்மண்ணுலகில் என்னைப் பார்க்கிலும் மனோ சந்துஷ்டியுடைய மன்னன் ஒருவன் இருக்கின்றானோ என்றே நான் சில சமயங்களில் யோசிக்கிறேன். என் குழந்தைகளைப் போல் நான் பாதுகாத்து வரும் என் குடிகளெல்லாம் ஒரு குறையுமின்றி வாழ்ந்து வருகின்றனர். சகல பாக்யங்களுடன், என்றும் காதல் குன்றா மனைவியையும் சத்புத்திரர்கள் எழுவரையும், பெற்றிருக்கிறேன். இவ்வுலகில் நான் வேண்டுவது இனி ஒன்றில்லை. இவையெல்லாம்எனது பூர்வ புண்ய பலனென்று நினைக்கிறேன். உனக்கென்ன தோன்றுகிறது இதைப்பற்றி?—என்ன, நான்கேட்கிறேன் சும்மா இருக்கிறாய்? [வெளியே சச்சிதானந்தர் பாடுகிறார்.]

"சங்கடமே ஜகம்
சஞ்சலமே அகம்
சங்கீதமே சுகம்."

மந்திரி! என்ன திவ்யமான சாரீரம்! யார் அது வெளியே பாடுகிறது? அழைத்து வரச் சொல் அப்பாடகனை உள்ளே,

அப் பாட்டை மறுபடியும் கேட்க விரும்புகிறேன்.

[மந்திரி ஒரு வேலையாளை வெளியே அனுப்புகிறான்.]

இன்று விஜய தசமியில் பாடிய வித்வான்களுடைய சங்கிதத்தை விட இது மிகவும் மேம்பட்டதாயிருக்கிறது; யாரோ பெரிய சங்கித வித்வானாயிருக்க வேண்டும்.

வேலையாள் சச்சிதானந்தரை அழைத்துக்கொண்டு வருகிறான்.

ஏ சன்யாசி யார் நீ?

ச. அதுதான் தெரியவில்லை.

கா. என்ன!—இவன் செவிடா என்ன?—நீ யார் என்று கேட்கிறேன்.

ச. அதுதான் தெரியவில்லை என்று பதில் சொல்கிறேன்.

கா. என்ன அதனப் பிரசங்கியாயிருக்கிறான்! ஏய், நான் யார் தெரியுமா உனக்கு?

ச. எனக்கு தெரியவேண்டிய அவசியமில்லை.

கா. என்ன துஷ்டனாய் இருக்கிறான்! வந்ததும் என்னை வணங்கவில்லை! இப்பொழுது இம்மாதிரி பதில் உரைக்கிறான். அடே! சேவகா! என்னை வழக்கப்படி வணங்காத இவனது இரண்டு கைகளையும்வெட்டி விடு இட்சணம்!

[சேவகன் அப்படியே செய்ய வாளை உருவுகிறான். சச்சிதானந்தர் தன் இரு கைகளையும் தலை மேல் கூப்புகிறார்.]

ச. ஜெய்! விஸ்வேசா!

ம. சேவகா! பொறு க்ஷணம்!—மன்னவர் அவர்கள் வார்த்தைக்குக் குறுக்காகக் கூறுவதற்காக மன்னிக்க வேண்டுகிறேன். இவர் யாரோ மஹானாகத் தோன்றுகிறார். கைகளைக் குறைக்கும்படி கட்டளையிட்ட காலத்திலும் கவலையுறாது நிற்கிறார்! ஆகவே அரசர் அவர்கள் முன்பிட்ட ஆக்கினையை மீட்டுக்கொள்ள வேண்டுகிறேன். அன்றியும் இவரது இனிய சங்கிதத்தைக் கேட்க, ஆஸ்தானம் ஆவல் கொண்டதை ஞாபகப் படுத்துகிறேன்.

கா. ஆம்—ஏய் சன்யாசி! நீ தானா சற்று முன்பாக வெளியில் பாடியது?

ச. ஆம்.

கா. ஏதோ சற்று முன்பாகப் பாடின பாட்டை மறுபடியும் பாடு, உன்னை மன்னித்து விடுகிறேன்.

ச. உம்முடைய மன்னிப்பை நான் கோரவில்லை, என் பாட்டைக் கேட்க வேண்டுமென்று கோரினால் பாடத் தடையில்லை. [முன்பு பாடிய பாட்டை மறுபடியும் பாடுகிறார்.]

கா. பேஷ்! பேஷ்!—மிகவும் நன்றாயிருக்கிறது. சன்யாசிக்கு இவ்வளவு சங்கீதப் பயிற்சி எங்கிருந்தையா வந்தது?

ச. அந்த பல்லவியின் அர்த்தத்தை ஆராய்ந்து பாரும் அறிவீர்.

கா. சங்கடமே ஜகம், சஞ்சலமே அகம், சங்கீதமே சுகம்!—உம்—பிறகு இதைப் பற்றி யோசிக்கிறேன்; இப்பொழுது இவ்வளவு நன்றாய்ப் பாடியதற்காக என்ன பரிசு உமக்கு வேண்டும்? கேளும் தருகிறேன்.

ச. எனக்குப் போக விடை தாரும். [போகப் புறப்படுகிறார்.]

கா. சன்யாசியாரே நில்லும் சற்று!—[அவரைத் தடுத்து] உமது உருவமும் வார்த்தைகளும் என் உள்ளத்தில் ஏதோ குழப்பத்தை யுண்டு பண்ணியிருக்கின்றன. உமது மஹிமை அறியாது முன்பு நான் கூறிய மொழிகளை மன்னியும்—தாங்கள் தயவு செய்து எனது அரண்மனையில் கொஞ்சகாலம் தங்கி யிருந்து என் அக்கியானத்தைப் போக்கக் கோருகிறேன்.

ச. அப்பா, கிராமேகாராத்ரம் என்கிற கிரமப்படி ஒரு நாளைக்கு மேல் ஓரிடத்தில் சன்யாசி தங்கலாகாது.

கா. ஆயின் இன்றிரவாவது இங்கு தங்கி யிருந்து என் அக்கியானத்தைப் போக்கி யருளவேண்டும்.

ச. அப்படியே ஆகட்டும்.

கா. மந்திரி—இம் மஹானை அழைத்துக்கொண்டு போய் அவர் வேண்டிய உணவை யெல்லாம் கொடுத்து உபசரித்து அழைத்துவா—நான் வசந்தமண்டபத்திற்குப் போகிறேன்

ச. [புன்னகையுடன்] ஹே! ராஜன்! இதற்கு வேண்டிய தெல்லாம் மூன்று பிடி அன்னமே.

[மந்திரி ஒரு புறமாக சன்யாசியை அழைத்துப் போகிறார். மற்றொருபுறமாக காசிமன்னன் பரிவாரங்கள் சூழப் போகிறார்.]

காட்சி முடிகிறது.



## இரண்டாம் காட்சி

இடம்—காசி ராஜன் அரண்மனையைச் சார்ந்த நந்தவனம்.

காலம்—சந்திரனோடு கூடிய இரவு.

சந்திரகாந்தக் கல்லின் மீது காசிராஜன் கவலையுடன் சயனித்திருக்கிறார். அருகில் நின்று நல்லதங்காள் பாடிக்கொண்டே சுஸ்ரூஷை செய்து கொண்டிருக்கிறாள். நிலவில் அவர்களது ஏழு மைந்தர்களும் பலவிதமாக விளையாடிக் கொண்டிருக்கிறார்கள்.

ந. [பாட்டை திடீரென்று நிறுத்தி விட்டு, சற்று நிதானித்துக் கணவனை உற்று பார்த்து] நாதா, அடியாள் இதைக் கேட்பதற்காக மன்னிக்கவேண்டும்; இன்று சங்கீத மண்டபத்தினின்றும் வந்தது முதல் ஏன் உமது முகம் ஒருவாறுயிருக்கிறது? உமது உணவையும் நீர் உமது வழக்கம்போல் புசிக்கவில்லை. இங்கு வந்த பிறகு நமது ஏழு மைந்தர்களுடன் கொஞ்சநேரமும் கொஞ்சி விளையாடவில்லை. உமது மனதில் ஏதோ சஞ்சலமிருக்கிறதென்றெண்ணி அதை என் சங்கீதத்தினால் போக்கலாமென்று முயன்று பார்த்தும் முடியவில்லை. நாதா, உமது மனதில் குடிகொண்டிருக்கும் குறை யென்ன? என்னிடம் கூறலாகாதா!

கா. ஒன்றும் விசேஷ மில்லை.

ந. என்னை பற்றியும் ஏதோ விசேஷ மிருக்க வேண்டும்; இல்லாவிடில் நான் பாடின பாட்டை முடிக்காமல் திடீரென்று நிறுத்தியதையும் கவனியாதிருப்பீரா?

கா. பிராணநாயகி, வேறொன்றும் விசேஷமில்லை இன்றைத் தினம் நமது சங்கீத மண்டபத்தில் ஒரு சன்யாசியைச் சந்தித்தேன். அவர் கூறிய வார்த்தைகள் என்மனதில் அதிக கிலேசத்தை யுண்டு பண்ணி யிருக்கின்றன—இதோ அவர் வருகிருர். [எழுந்திருக்கிருர்.]

மந்திரி சச்சிதானந்தரை அழைத்துக்கொண்டு வருகிருர்.

ஸ்வாமி வரவேண்டும்—இங்கு வீற்றிருக்கவேண்டும்—இதோ என் மனைவி—இவர்கள் என் ஏழு மைந்தர்கள்—பெண்மணி, குழந்தைகளுடன் இவர் பாதத்தில் நமஸ்கரித்து இவரது ஆசியைப் பெறுவாயாக.

[அப்படியே அவர்கள் நமஸ்கரிக்கின்றனர்.]

ச. தீர்க்க—சுமங்கலீ பவ!—தீர்க்க—ஆயுள் உடையவர்களா யிருப்பீர்களாக!

கா. ஸ்வாமி—அரண்மனை போஜனம் திருப்திகரமாயிருந்ததோ—ஏதேனும் குறையாய் யிருந்ததா?

ச. அப்பா, குறையொன்று மில்லை வேண்டியபடி யிருந்தது.

ம. அரசே இதை நான் தெரிவிக்க வேண்டியது என் கடமையாகும். நான் அறுசுவை யுண்டியையும் அவர் முன் படைத்தும், அதில் மூன்றே மூன்று கவளம் தான் எடுத்துக் கொண்டார். அதிலும் ஒன்றை ஏதோ தியானித்து ஒரு பக்கமாக வைத்து விட்டார். மற்றொரு கவளத்தை வீதியில் பிட்சை கேட்ட ஒரு பிச்சைக்காரனுக்குக் கொடுத்து விட்டார். மூன்ருவது கவளத்தை மாத்திரம் உட்கொண்டார்.

கா. ஸ்வாமி, இட்ட உணவில் ஏதேனும் குறையிருந்ததோ? அன்றேல், நான் இழைத்த குற்றத்திற்காக என்னை இவ்வாறு தண்டிக்கின்றீரா?

ச. அப்பா, அப்படியொன்று மில்லை. இதுவே என் வழக்கமாம்; முதற் கவளத்தை என் ஆசானுக்கு அர்ப்பணம் செய்தேன், இரண்டாவதை ஒரு பாதேசிக்குக் கொடுத்தேன், மூன்

றுவதை இப்பாழில் போட்டேன். இனி நான் இவ்விட மிருந்து ஏக விடையளிப்பாய்.

கா. ஸ்வாமி; நான் தங்களைத் தடை செய்யலாகாது—ஆயினும் போகுமுன் தாங்கள் பாடிய பாட்டை சற்று விளக்கி எனக்கு ஞானோபதேசம் செய்யவேண்டுமென்று பிரார்த்திக்கிறேன்.

ச. வேறொன்று மில்லை, அதன் தாத்பர்யம் நீ சற்று ஆலோசித்துப் பார்ப்பாயாயின் உனக்கே விளங்கும். மொத்தத்தில்—இவ்வுலக வாழ்க்கையைச் சதமென எண்ணாது சஞ்சலமற்ற மனத்தை யடைந்து ஜீவன் முக்தி யடைய வேண்டுமென்பதாம்

கா. ஸ்வாமி, அதை யடையும் மார்க்கம் எனக்குத் தாங்கள் உபதேசித்தருளவேண்டும்.

ச. அதற்கு தகுந்த பரிபக்குவ காலத்தை நீ இன்னும் அடையவில்லை. அக்காலம் வரும்போது நானே உனக்கு அம்மார்க்கத்தை விளக்குவேன்.

கா. ஸ்வாமி! அக்காலம் எப்பொழுது வரும்?

ச. உனது பிராரப்த மெல்லாம் அனுபவித்த பிறகே அக்காலம் வரும்.

கா. ஸ்வாமி, நீர் கூறுவது எனக்கு விளங்கவில்லை, சற்றே தெளிவாய்த் தெரிவிக்க வேண்டுகிறேன்.

ச. ஆயின்—உனது மனைவி மக்களை—ஒரு புறமாய்ப் போயிருக்கச் சொல். மந்திரியையும் போகச் சொல்.

[மந்திரி போகிறார்.]

கா. கட்டளைப்படி—பெண்மணி நமது மைந்தர்களை அழைத்துக்கொண்டு நீ சயனக்கிரகம் போயிரு, நான் வருகிறேன் சீக்கிரம். [நல்லதங்காள் தன் மைந்தர்களை அழைத்துக் கொண்டு போகிறாள்.]

ச. அப்பா பிராரப்தம் என்றால் பூர்வகர்மபலன். நீ பூர்வ ஜன்மத்தில் செய்த பாபங்களை யெல்லாம் அனுபவித்துப் பரிசுத்தனான பின்னை நீ முத்தி மார்க்கத்தை யடையலாம்.

கா. அந்தோ!—நான் என்ன பாப மிழைத்தேனே? என்ன பிராயச்சித்தம் செய்யவேண்டுமோ?

ச. அதையெல்லாம், ஒரு சமயம் வரும், அப்பொழுது விளங்கச் சொல்லுகிறேன். இப்பொழுது சூட்சுமமாகக் கூறுகிறேன் கேட்பாயாக—இன்னும் ஏழாண்டு உன் அரசு பஞ்சத்தினால் பீடிக்கப்பட்டு பாழடையும். உன் ராஜ்யத்தை யிழப்பாய்; உன் மனைவி மக்கள் உன்னை விட்டுப் பிரிவார்கள்; உன் மனைவி தன் மாங்கல்யத்தை யிழந்து மறுபடி பெறுவாள். உன் ஏழு மக்களும் மடிந்து மறுபடியும் உயிர் பெறுவார்கள். உன் ராஜ்யத்தையும் பெறுவாய் அஞ்சாதே. இனி ஏழாண்டு கழித்து உன்னை விஸ்வேஸ்வரர் ஆலயத்தில் சந்திப்பேன். அச்சமயம் இதன் ரகசியத்தை உனக்கு அறிவிக்கிறேன். அதுவரையில் இதை ஒருவருக்கும் வெளியிடாதே! [மறைகிறார்.]

கா. அந்தோ! மறைந்தனரே மஹான்! [திகைத்து நிற்கிறார்.]

காட்சி முடிகிறது.

---

## மூன்றாம் காட்சி

இடம்—தானமண்டபம்.

காலம்—பிற்பகல்.

கா. மந்திரி, இன்றைக்கு அரண்மனைக்கு வந்தவர்களுக் கெல்லாம், அளவுபடி அமுது படி கொடுத்தாயிற்றா?

ம. எல்லோருக்கும் கொடுத்தாயிற்று—ஏறக்குறைய பாதிபகல் கழிந்துவிட்டது, தாங்கள் இனி போஜனத்திற்கு போகலாம்.

கா. [தலையசைத்து] மந்திரி, உமது வார்த்தைகளை மற்றெல்லா விதத்திலும் நம்பியபோதிலும் இவ்வொரு விஷயத்தில் மாத்திரம் நம்புவதற்கில்லை. என்மீதிருக்கும் உமது வாஞ்சையானது இதில் உம்மை சிறிது சத்தியத்தினின்றும் தவறச் செய்கிறது என்பதை நேற்று கண்டேன். இப்பஞ்சம் ஆரம்பமானது முதல் என் பிரஜைகள் ஒருவர்கூடப் பசித்திருக்க

நான் புசியேன் என்று நான் மேற்கொண்ட விரதத்தை பங்கப் படுத்தாதபடி நீர் வெளியேபோய் அங்கு மிகுதியா யிருப்பவர்களுக் கெல்லாம் படியளந்துவிட்டு வாரும். அது வரையில் நான் போஜன சாலைக்குப் போகேன்.

[மந்திரி முகவாட்டத்துடன் போகிறார்.]

காசிநாதா! உமது கருணையிவ்வாறு இருந்தது போலும்! எல்லா சம்பத்துகளையும் பெற்று, என்னைவிட பாக்கியசாலி யான மன்னன் இம் மண்ணுலகில் வேறு இல்லை என்று இறுமாந்திருந்ததற்கு, அக்கர்வத்தை அறவே அடக்கினீர், நியாயம். என்பொருட்டு என் எளியப் பிரஜைகளை வருத்த முறச்செயல் உமது மேன்மைக்கு அழகோ? இனியேனும் என் பிரஜைகள்மீதுகருணை கூறும்—அன்று அம்மஹான் கூறிய கடும் பஞ்சத்தை இந்த ஆறரை வருடங்களாக எவ்வளவோ கஷ்டப்பட்டுக் கடைத்தேறினேன். இனி மிகுதியாயிருக்கும் ஆறுமாதகாலத்தை எப்படி கழிப்பதென்றே கவலைப்படு கிறது என்மனம். என்ன நேர்ந்தபோதிலும் இக்கஷ்டங் களெல்லாம் இன்னும் ஆறுமாத மானபின் தீருமல்லவா? அம்மட்டும் சந்தோஷம்தான். ஆயினும் அதற்குள்ளாக என் மனைவி மக்களை விட்டுப் பிரிய நேரிடுமென்றே! ஈசனே! அதையாவது சற்று தயைசெய்து மாற்ற மாட்டீரா?

[வெளியில் பெருங் கோஷ்டம்.]

ஓ! இன்னும் அனேகர் பசியுடன் களைத்திருக்கிறார் போலிருக் கிறதே! அந்தோ! பசியினால் வருந்தும் என் பிரஜைகளின் பரிதாபக் குரல் என் நெஞ்சில் பகீர் என்கிறதே! இன்னும் ஆறுமாதம் இதை நான் கேட்க வேண்டுமோ?

மந்திரி வருகிறார்.

மந்திரி, எத்தனைபெயர் வெளியே காத்திருக்கிறார்?

ம. அறுபத்திரண்டு பெயர்.

கா. அவர்கள் ஏன் அவ்வாறு கூச்சலிடுகின்றனர்? அவர்களுக்கு இன்றைத்தின முறைப்படி படியளக்கவில்லையா? என்ன சும்மா இருக்கிறீர்?

ம. இல்லை.

கா. இல்லையா? ஏன்? உண்மையை உரையும்—நமது களஞ்சியங்களிலிருந்த தானியமெல்லாம் ஆய்விட்டதா? பாதிபடி யளந்தால் இவ்வருஷம் முற்றிலும் கடக்கலா மென்றீரே?

ம. ஆம் அப்படித்தான் கணக்கிட்டேன். நமது களஞ்சியங்களிலுள்ள தானியம் களவு போயிருக்கவேண்டும் கொஞ்சம்.

கா. இப்பொழுது நாம் என்னசெய்வது?

ம. எனக்கொன்றும் மார்க்கம் தோன்றவில்லை; ஆயினும் தாங்கள் கொஞ்சம் போஜனம் செய்யுங்கள்; தாங்கள் முன்பே துயரத்தாலும், பிரஜைகள் புசிப்பதுபோல் ஆறு மாதமாகப் பாதி உணவு கொள்வதாலும், மிகவும் மெலிந்திருக்கிறீர்கள்.

கா. மந்திரி, என் விரதத்தினின்றும் என்னைத் தவறச் சொல்கிறீரா?—எங்காவது தேடிப் பார்க்கச் சொல்லுங்கள் நமது சேவகர்களை, எங்காவது கொஞ்சம் தானியம் ஒளித்துவைக்கப்பட்டிருக்கிறதா என்று, என் முகத்தைத் திருப்பிக் கொள்கிறீர்?—ஓகோ!—என்னிடம் ஒளியாதீர் — எங்கே இருக்கிறது? கொஞ்சம் சொல்லும் வாஸ்தவத்தை.

ம. மஹாராஜா! என்னை மன்னிக்க வேண்டும்—தங்களுக்கும் தங்கள் பத்தினிக்கும் மைந்தர்களுக்கும் ஒரு வாரத்திற்கு வேண்டிய தானியம் நமது கோட்டைச் சுரங்கத்தில் ஒரு பக்கம் ஒளித்து வைத்திருக்கிறேன், எப்படியிருக்குமோ என்று.

கா. அது நீர் செய்தது தவறு—அதைப்பற்றி பிறகு விசாரிக்கிறேன். முன்பு அதை வெளியில் எடுத்து வாயிலிலிருக்கும் பிரஜைகளுக்கெல்லாம் பகிர்ந்து கொடுத்து விடும்—ஒரு வார்த்தையும் பேசாதீர்.

ம. அதை அவர்களுக்குப் பகிர்ந்து கொடுத்தால் சரியாகிப் போய்விடும்.

கா. சந்தோஷம்.

ம. பிறகு?—நாளைக்கு?

கா. மிருதியாயிருக்கும் பிரஜைகள் கதி எனக்கும் என் மனைவி மக்களுக்கும் ஆகிறது.

ம. [அழுகையுடன்] மஹாராஜா! தங்களுக்கும் இக்கதி வாய்க்க வேண்டுமோ! அஷ்ட ஐஸ்வரியங்களுடன் வாழ்ந்த தமக்கு அத்தனை உணவில்லாமற் போவதா? அறுசுவை யுண்டியை அமர்ந்து அருந்திய தமது அருமை மனைவியும் மைந்தரும் ஏதுமில்லாதவரைப்போல் பசி பசி என்று ஏங்கிடக் காலம் வாய்த்ததே! தமக்கு மந்திரியாய் இத்தனை வருடம் நான் இருந்ததற்கு இதுதானோ பலன்? இதைவிட என் உயிரைப் போக்கிக் கொள்வதே மேலாகும்.

[தற்கொலை புரிய தன் உடைவாளை ஓங்குகிறான்.]

கா. [அதைத் தடுத்து] மந்திரி! என்ன காரியம் செய்யத் துணிந்தீர்! உமது உயிரைப் போக்கிக் கொள்ள உமக்கென்ன சுதந்திரம் உண்டு! அது அரன் அளித்த அடைக்கலப் பொருளாகும். கொடுத்தவன் வாங்கிக் கொள்ள விரும்பும் சமயம் அதைக் கொண்டு போகட்டும். [வெளியில்பெரிய கோஷ்டம்] மந்திரி, என் சொற்படி தவறாது நடவும். முன்பு போய் அவர்களுக் கெல்லாம் எனக்காகவென்று வைத்திருந்த தானியத்தைப்பகிர்ந்து கொடுத்துவாரும். [மந்திரி போகிறார்] சங்கடமே ஜகம்! சங்கடமே ஜகம்! நன்றாய்ச் சொன்னார்!—

கோர்த்தவால் ஒரு வயிறு பெருத்த மனிதனைக் கைதியாக்கிக் கொண்டு வருகிறான்.

கோ. நமஸ்காரம்—மஹாராஜா, சில நாட்களாக தமது களஞ்சியங்களில் களவு போகிறதெனக் கள்வனைக் கண்டு பிடிக்கும்படி மந்திரியவர்கள் எனக்கு நியமித்தார்கள். இதோ அத் திருடனைக் கண்டு பிடித்தேன். ஒரு களஞ்சியத் தருகில் இவனைக் கையும் பிடியுமாகப் பிடித்தேன். உதைத்துக் கேட்டதில் ஒப்புக் கொண்டான். நாம் எல்லாம் வற்றலாய் உலர்ந்திருக்க இவன் மாத்திரம் அளவிற்கு மிஞ்சிய தானியத்தைத் திருடித் தின்று கொழுத்திருக்கிறான் பாருங்கள்! இவனுக்கு உடனே தக்க சிட்சை விதிக்கவேண்டும்,

கா. அந்தோ! பாபம்!—அப்பா! ஏன் இக்குற்றம் செய்தாய்?—சாதாரண காலத்திலேயே களவென்பது பெருங்குற்றமாம், அதுவும் இப் பஞ்ச காலத்தில் பரம பாதகமாமே! இதைச் செய்தது உண்மைதானா?—உனக்கு நான் தண்டனை விதிக்குமுன் நீ ஏதாவது சொல்லிக்கொள்ளவேண்டியதிருக்கிறதா? [அம்மனிதன் தன் வயிற்றினையும் வாயினையும் காட்டுகிறான்.]

கோ. மஹாராஜா! உமக்கிதை முன்பே கூற மறந்தேன், இவன் ஊமை.

கா. ஐயோ பாபம்!—இவன் பூர்வோத்தரம் என்ன? இவன் பரம்பரை குற்றவாளியா? அல்லது இப்பஞ்சகாலத்துக் குற்றவாளியா?

கோ. மஹாராஜா, இவன் பழைய குற்றவாளியல்ல; நான் விசாரித்தவரையில் நற்குலத்துதித்தவன் தான்; நன்றாய் வாழ்ந்தவன்—ஆனால் பெரும் திண்டிக்காரனாம்.

கா. ஆகவே இப்பஞ்சகாலத்தில் நான் அளக்கும் படி, எப்படி இவ்வளவு பெரிய உடலையுடைய இவனுக்குப் போதுமானதாயிருக்கும்? பிரஜைகள் இழைக்கும் பாபம் பாதி அரசனைச் சேர்கிறது என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதுவும் இக்காலத்தில் நான் இழைத்த பாபமே இப்பஞ்ச உருவெடுத்து என் பிரஜைகளை வாட்டுகிறது—என்று நினைக்கிறேன்—கொத்தவால், இவனுக்கு நான் என்ன தண்டனை விதிக்கவேண்டுமென்கிறாய்?

கோ. மஹாராஜா, தர்ம சாஸ்திரப் பிரகாரம் பஞ்சகாலத்தில் தானியத்தைத் திருடுபவனுடைய இரண்டு கைகளையும் சேதிக்கவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது.

கா. வேண்டாம், அதற்கு ஒருகாலும் நான் உடன்படேன், அன்றியும் இவன் ஊமை பாபம்! இவன் இழைத்த பாபத்திற்கு நான் பாதி உத்திரவாதம் என்று நினைக்கிறேன். இவனை நான் மன்னித்து விடலாகாதா?

கோ. மஹாராஜா, அவ்வாறு செய்யலாகாது, இவனை ஏதாவது தண்டியாது விட்டால் மற்றவர்களும் இவ்வாறு குற்றம் செய்ய இடம் கொடுக்கும்.

கா. ஆம் நீ கூறுவதும் நியாயம் தான்—இவனை முகத்தில் கரும் புள்ளி செம்புள்ளி குத்தி, ஒரு கழுதை மீதேற்றி, நகர் வலம்வரச் செய்து, நமது நாட்டெல்லைக்கு வெளியில் துரத்தி விடு.

கோ. அப்படியே மஹாராஜா.

கா. உம்—கொத்தவால்—அக் கழுதை இவனைச் சுமப்பதிஞல் கஷ்டப்படாதபடி இவன் உருவத்திற்குத் தகுந்த பெரிய கழுதையாய்ப் பார்த்து இவனை அதன் மீது ஏற்று.

கோ. மஹாராஜாவின் கட்டளைப்படி.

[குற்றவாளியை அழைத்துக்கொண்டு போகிறன்.]

கா. ஏழை மனிதன்!—ஐயோ! என் மனம் இக்கவலையெல்லாம் நீங்கி எப்பொழுது நிம்மதியடையும்?—சஞ்சலமே அகம்! சஞ்சலமே அகம்!

காட்சி முடிகிறது.

## நான்காம் காட்சி

இடம்—காசிராஜன் அரண்மனை அந்தப்புறம்.

காலம்—மாலே.

காசிராஜன் சாதாரண ஜனங்களின் உடையில் ஒரு சாதாரண நாற்காலியில் உட்கார்ந்திருக்கிறர். மந்திரி சத்தியவாக் அவர் அருகில் நிற்கிறர்.

கா. மந்திரி, உனது மேம்பட்ட குணத்தை மெச்சினேன். ஆயினும் நீ அவ்வாறு செய்தது நியாயமல்லவென்று தோன்றுகிறது.

ம. மஹாராஜா, தங்கள் அரண்மனையிலிருந்த உமது அளவற்ற ஐஸ்வர்யத்தையெல்லாம் உமது பிரஜைகள் அயல் நாடு சென்று வாழ்வதற்காகக் கொடுத்த பொழுது, அடி

யேன் எனது அற்ப பொருளைக் கொடுத்தது ஒரு பெருங் காரியமா ?

கா. அப்படியல்ல, அரசனிடமுள்ள பொருள் பரம்பரையாக அவனுடைய பிரஜைகளின் க்ஷேமகார்த்தம் அவனிடம் ஈசனால் அவனுக்கு அளிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே அவர்களுக்காக என்னிடம் காப்பாக வைக்கப்பட்ட பொருளை அவர்களைக் காப்பதற்காக நான் கொடுத்தது விசேஷமல்ல, அது என் கடமையாகும். நீ அமாத்தியத் தொழிலினால் அடைந்த பொருளை நீ தானமாகக் கொடுத்தது தான் மிகவும் மெச்சத் தக்கது.

ம. மஹாராஜா, நீர் உமது கடமையைச் செய்தால் நான் என் கடமையைச் செய்யவேண்டாமா ? நீர் எனக்களித்த பொருளை ஆபத்காலத்தில் உமக்கு உதவுவதற்கல்லாது வேறு விதத்தில் உபயோகித்தல் தர்மமாகுமா ?

கா. [ஒருவாறு நகைத்து] மந்திரி, உனது பேரன்பையும் பேரறிவையும் கண்டு மகிழ்ந்தேன்—அதிருக்கட்டும், நமது மிகுதியாயிருந்த பிரஜைகளெல்லாம் அயல் நாடுகளுக்குப் போய் வாழ ஏற்பாடு செய்து விட்டாயா ?

ம. செய்து விட்டேன். அவர்களில் அநேகர் இன்று பகற் பொழுதிலேயே பிரயாணம் புறப்பட்டு விட்டார்கள். மிகுதியானவர்கள் இன்றிரவு போய் விடுவார்கள்.

கா. [பெருமூச்செறிந்து] உம் !—மந்திரி, நீ என்ன செய்யப் போகிறாய்?

ம. உம்முடன் இருக்கப் போகிறேன்.

கா. நான் என் மனைவி மக்களுடன் உணவின்றிச் சாக நேர்ந்தால் ?

ம. நானும் என் மனைவி மக்களுடன் அப்படியே செய்கிறேன்.

கா. உம் !—ஈசனே ! ஈசனே !—அப்பா, அமைச்சன் கடமை அரசன் சொற்படி நடக்க வேண்டு மென்பதல்லவா ?

ம. ஆம்.

கா. ஆனால் என் சொற்படி நட, நீயும் உனது மனைவி மக்களுடன் அயல் நாடேகுங்கள் இன்றிரவு.

ம. [அவர் பாதத்தில் பணிந்து துக்கத்துடன்] மஹாராஜா! தங்களை வேண்டிக் கொள்கிறேன் அவ்வாறு கட்டளை யிடாதீர்கள்! வேண்டாம்! வேண்டாம்!

கா. மந்திரி, எழுந்திரு வருத்தப்படாதே—நான் சொல்வதை சற்று கேள்—இன்னும் ஆறுமாதத்திற்கெல்லாம் இப்பஞ்சம் நீங்கி நமது நாடு நன்றாகு மென்றும் அப்பொழுது நாமும் ஒருவரையொருவர் சந்தோஷமாய்ச் சந்திப்போம் என்றும் எனக்குள் ஏதோ தோன்றுகிறது. அதற்குக் காரணத்தை இப்பொழுது கேளாதே. சமயம் வருங்கால் சொல்லுகிறேன். அதுவரையில் நீ என்னை விட்டு நீங்கித்தான் இருக்கவேண்டும். அது வரையில் நான் சொன்னபடி செய்.

ம. ஐயோ! மஹாராஜா, உம்மிடம் மந்திரி தொழில் செய்து விட்டு, அயல் நாட்டிற்குப்போய் வேறொரு தொழில் புரிந்து நான் வாழ்வதா?—என்னிடமோ ஒரு பொருளும் இல்லை—உம்மிடமும் ஒன்றுமில்லை. நான் எதைக்கொண்டு ஜீவிப்பது என் மனைவியுடனும் மூன்று மக்களுடனும்?

கா. [சற்று யோசித்து] வேறுவழியில்லை — பார்ப்போம் ஈசன் திருவுள்ளத்தை!— [பக்கத்து அறையை நோக்கி] பெண்ணே!—குலசேகரி!—

ந. நாதா! இதோ—கொண்டு வந்தேன்!

[நல்லதங்காள் இரண்டு பெரிய மூட்டைகளைக் கொண்டு வந்து அரசன் பாதத்தருகில் வைக்கிறாள்.]

கா. பெண்ணே! என்ன இவை?

ந. நாதா! இம்மூட்டையில் என் ஆடையாபரணங்கள்!- இதில் நமது மைந்தர்களின் ஆடை ஆபரணங்கள்.

கா. கண்ணே! நீயே பதிவிரதா சிரோமணி! கணவன் கருத்தினையறிந்து ஒழுகும் ஒப்பற்ற கற்பிற்கரசி நீயே! பெண் மணி, என் மனதிலிருந்ததை எப்படியறிந்தாய் நீ?

ந. நாதா, நேற்றைத்தினம் தங்களுடைய ஆடையாபரணங்களையெல்லாம் களைந்து நமது பிரஜைகளுக்குக் கொடுத்த பொழுது உமது முகத்தை நோக்கினபொழுது, நமது பணவிமக்களின் பொருள்களைக் கொடுக்க வேண்டிவருமென்று தாம் எண்ணியது போல் தோன்றியது, ஆகவே அது முதல் மெல்ல இவைகளையெல்லாம் சேகரத்திவைத்தேன், பிறகு இன்று தாங்கள் மந்திரியுடன் பேசநேரிட்டபொழுது பக்கத்து அறையிலிருந்து கேட்டுக்கொண்டிருந்தேன்—அது தவறாயின் மன்னிக்க வேண்டும்.

கா. கற்பிற்கரசியே! உன் உள்ளத்தில் படுவது ஒரு காலும் தவறாகாது: உத்தம பெண்டிர்க்கோர் மழை எனும் வாக்கியமும் என்பாபவசத்தால் இக்காலம் பொய்க்கும்படி ஆச்சுதே! அந்தோ நமது நாடுநன்றாவது எந்நாளோ? கங்கை பெருகுவது எக்காலமோ?

ந. கங்காதான் உளம் உருகும் காலம்தான் அது பெருகும் இன்று போஜனம் கொள்ளலாம் வாரும்; மரம் வைத்தவன் தண்ணீர் வார்க்க மறந்து போவான்! [போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

---

## ஐந்தாம் காட்சி

இடம்—காசிராஜன் அந்தப்புறத்தில் சயனக்கிரஹம்.

காலம்—நடுநிசி.

நல்லதங்காளும் எழுமைந்தர்களும் பசியால் மெலிந்து அலங்கோலமாய்ப் படுத்திருக்கின்றனர். காசிராஜன் கவலையுடன் வந்து ஒரு புறம் ஒளிந்து கேட்கிறார்.

மைந்தர்கள். அம்மா! பசிக்குது அம்மா! பசிக்குது. [அழுகின்றனர்.]

ந. குழந்தைகளே! இத்தனை நேரம்பொறுத்தவர்கள் இன்னும் கொஞ்சம் பொறுங்கள், அப்பா போயிருக்கிறார் ஏதாவது புசிப்பதற்கும் கிடைத்தால் கொண்டுவருவார். ஏதோ நான் கொஞ்சம் பாடுகிறேன் அதைக் கேட்டுக்கொண்டே கொஞ்சம் தூங்கிப்பாருங்கள். [பாடுகிறாள்.

காசிவிஸ்வேசா! கயிலைவாசா! கருணைக்கடலே! கடையோங்கள் மீது இன்னும் உமக்கு இரக்கம் பிறக்கவில்லையா? இன்னும் எத்தனை நாள் இப்படி இடும்பையில் உழல்வோம்? எனக்காக நான் உம்மை வேண்டவில்லை, பரமசுகத்திலிருந்த என்பர்த்தாவின் பொருட்டும் பால்மணமாறு இப்பச்சைப் பாலர்கள் பொருட்டும் உமது பாதங்களை என் மனதினுற் பற்றி வேண்டுகிறேன். [பாடுகிருள்]

காசி ராஜன் பாதி அன்னுசிப்பழத்துடன் எதிரில் வருகிருர்.

கா. சங்கீதமே சுகம்! சங்கீதமே சுகம்!—கண்மணி! நிறுத்தாதே! அப்பாட்டைப்பாடி முடி. [அப்படியே செய்கிருள்.] அப்மஹான் கூறியவார்த்தையின் உண்மையை இன்றே கண்டேன். இதைப்பார்க்கினும் தௌர்ப்பாக்கியம் இல்லை என்னும் படியான அப்படிப்பட்ட இன்னலிற் பட்டிருக்கும் என்மனமானது உன் இனிய சங்கீதத்திஞல் பரவசமுற்று சற்றே நிம்மதியடைந்தது.

ந. நாதா, அடியாள்பாக்கியம், இந்த அற்ப ஆறுதலாவது உங்களுக்குக் கொடுத்தேனே.—நாதா, ஏதாவது கிடைத்ததா ஈசன் அருளால்? குழந்தைகளெல்லாம் பசியால் வருந்தி அழுது அப்படியே அயர்ந்து அலுத்துத்தூங்குகின்றனர்.

கா. மண்ணுலகில் என்மைந்தர்களாய்ப் பிறந்த பாபமா இது! [வருந்துகிருர்.]

ந. நாதா! அப்படிக்கூறுதிர். என் பாபவயிறு செய்த பாபமாம் இது!—தாம் கண்ணீர் விடக்காதகி நான் கண்டு உயிர் வாழ்கிறேனே! [துக்கிக்கிருள்.]

கா. கண்மணி, இப்படிநாம் கவலைப்படுவதில் என்ன பிரயோஜனம்? நம்முடைய மனதை நாமே தேற்றிக்கொள்வோம். [அவளது கண்ணீரைத் துடைத்து] இதோ எனக்குக் கிடைத்தது. [தன்வஸ்திரத்தில் மறைத்துவைத்திருந்த பாதி அன்னுசிப்பழத்தைக் காட்டுகிருர்.]

ந. அந்தோ! அதுவும்—பாதி—பழமா?

கா. பெண்மணி, உன்னிடம் நான் உண்மையை ஒளிக்கலாகாது. இன்றிரவு நான் நமது பழத்தோட்டத்திற்குச் சென்று பிரஜைகள் கொண்டுபோனது தவிர, மிகுதியாக ஏதாவது பழம் இருக்கிறதா என்று நிலவுவெளிச்சத்தில் தேடிப் பார்க்க, சருகுகளால் மூடப்பட்டு ஒரு அன்னாசிப்பழம் தான் கிடைத்தது, அதாவது கிடைத்ததே என்று அதை நான் அரண்மனைக்குக் கொண்டுவரும் சமயம், நமது சமயற்காரன் அப்பாசாமி, வயதுசென்ற தன் தாயாரை முதுகில் தூக்கிக் கொண்டு அயல் நாட்டிற்குப் போய்க்கொண்டிருந்தவன், என்னை சந்தித்தான். அவன் பார்வையானது பன்முறை இப் பழத்தின்மீது விழ, நான் பரிதாபங்கொண்டு, என்ன அப்பா உனக்கு வேண்டும் என்று கேட்க, அவன் "எனக்கொன்றும் வேண்டியதில்லை, தொண்டு கிழவான என் தாயார் பசியால் மிகவும் பீடிக்கப்பட்டிருக்கிறார்கள், அவர்களுக்கு அப்பழத்தில் கொஞ்சம் கொடுக்கக்கூடுமானால் கொடுங்கள்" என்று கேட்டான். உடனே நான் பச்சாத்தாபப்பட்டு இப் பழத்தில் பாதியை அவனுக்கு அறுத்துக்கொடுத்தேன். மிகுந்த பாதியை உனக்கும் உன்மைந்தர்களுக்கும் கொண்டு வந்தேன். [அதை நல்லதங்காள் வாங்கிக்கொள்கிறாள்]

ந. விஸ்வநாதா! விஸ்வநாதா!—இப்படிப்பட்ட உத்தம புருஷனுக்கு மனமிரங்காதிருக்கிறீரே, உமது மனம் தான் என்ன கல்லோ! [அதில் பாதியறிந்து] நாதா, இதைத் தாங்கள் புசியுங்கள்.

கா. பெண்மணி, எனக்கொன்றும் வேண்டாம், உனக்கும் நமது மைந்தர்களுக்கும் இதைக்கொண்டுவந்தேன். நீங்கள் புசியுங்கள்—என் சொற்படி நடக்கவேண்டியது உன்கடமையல்லவா?

ந. ஆம். ஆயினும் என் விரதத்தைக் காப்பாற்ற வேண்டியது உமது கடமையல்லவா?

கா. என்ன உன் விரதம்?

ந. நீர் புசித்த பின்பே புசிக்கவேண்டு மென்பதாம்.

கா. சரி ஆனால்—

[பழத்தில் ஒரு சிறிது பாகம் எடுத்துப் புசிக்கிறார்]

ந. சரி ஆனால்—நீர் புசித்த அளவுதான் நானும் புசிக்கக் கூடும். [அவ்வளவே தானும் புசிக்கிறாள்.]

கா. கண்ணே! உன்கற்பின் திறத்தை மெச்சினேன். கற்பிற்கரசியாம் உனக்கும் இக்கஷ்ட நிலையை விதித்திருக்கிறாரே கருணைக்கடலென்று பெயர்வைத்துக் கொண்டிருக்கும் அக்கடவுள்!

ந. தன் தலைமேல் தரித்த கங்காதேவியையே வற்றச்செய்தவர் நம்மை வாட்டுவது ஓர் அதிசயமன்று.—நாதா, உங்கள் உத்தரவின்மீது இப்பழத்தின் மிகுதியை நமது மைந்தர்களுக்குப் பிறகு பகிர்ந்து கொடுக்கிறேன். இப்பொழுது தூங்குபவர்களை எழுப்புவது உசிதமல்ல.

[பழத்தை ஒரு பக்கம் வைக்கிறாள்]

கா. பெண்மணி, நீயும் சற்றுபடுத்து உறங்கு, அதனால் உனது பசியின் களை சிறிது குறையும்.

ந. உத்தரவுபடி—ஐயோ!—நமக்குப் படுக்கப்பாயும் இல்லையே!

கா. பெரிதல்ல என்மடிமீது சயனிப்பாய் [நல்லதங்காள் அப்படியே செய்கிறாள்] கண்மணி, நான் பரமேஸ்வரனைக் குறித்து தியானிக்கிறேன்; அப்பாட்டைக் கேட்டுக்கொண்டே சற்று உறங்குவாய். [ஸ்தோத்திரப் பாட்டு ஒன்றைப் பாடுகிறார், இதற்கிடையில் நல்லதங்காள் உறங்குகிறாள்.] உறங்கிவிட்டாள்:— அருமலர்கள் பரப்பிய அம்சதூளிகா மஞ்சத்தில் படுத்து தூங்கிய நீ இப்பொழுது கட்டாந்தரையில் கைதியைப்போல் படுக்கநேரிட்டதே!

ந. [உறக்கத்தில்] போதும்! போதும், வேண்டாம் இனி அண்ணா!

கா. என்ன உறக்கத்தில் பேசுகிறாள்? கனவு காண்கிறாளா என்ன?

ந. [உறக்கத்தில்] போதும்!—போதும்!

கா. என்னவோ கலவரப்படுகிறாள்—எழுப்புவோம் — பெண்மணி!—என்ன! கனவு காண்கிறாயா என்ன?—

[எழுப்புகிறார்.]

ந. நாதா !—நான் என்ன உறங்கியா விட்டேன்?

கா. ஆம்—என்ன? ஏதாவது கனவு கண்டாயா என்ன ?

ந. ஆம்—அந்தோ ! இச்சமயத்தில் இப்படிப்பட்ட கனவா காணவேண்டும் !

கா. பெண்மணி, என்ன கனவு கண்டாய்? சொல்.

ந. எனக்கு நாணமாயிருக்கிறது.

கா. ஒன்றும் அஞ்சாதே சொல்.

ந. நான் எனது தாய் வீட்டிற்குப் போனதாயும் அங்கு என் தமயன் எனக்கு அறுசுவையுண்டி அளித்ததாயும் கனவு கண்டேன் ! என்ன விந்தை ! நான் வயிறு நிரம்பப் புசித்தும் இன்னும் அதிகமாகப் புசிக்கும்படி என் தமயன் என்னை நிர்ப்பந்திப்பது போல் கனவு கண்டேன்.

கா. உம் !—இதுவும் தெய்வத்தின் திருவுள்ளம் போலும் !

ந. நாதா—

கா. பெண்மணி, என்ன நாதா என்று அழைத்துவிட்டு சும்மா இருக்கிறாய் ? உன் மனதில் ஏதோ இருக்கிறது. அதை இன்னதென்று சொல்.

ந. நாதா, நான் உங்களை ஒன்று கேட்கிறேன்—அதற்குத் தாங்கள் உடன் படவேண்டும்.

கா. கண்மணி, உன் வேண்டுகோளை மறுப்பேனோ?—ஆயினும் அது இன்னதென்று சொல், நான் செய்யக் கூடியதாயின் கட்டாயமாய்ச் செய்கிறேன்.

ந. நாதா, நமது பட்டணத்தை விட்டு நமது பிரஜைகளெல்லாம் போய்விட்டனர்—நமது மந்திரியும் போய் விட்டார்-நாமும் இந் நகரை விட்டு எங்காவது போவோமே ?

கா. கண்மணி! நீ மற்று எல்லாமறிந்திருந்தும் ராஜ தர்மம் அறிந்திலை. மன்னனானவன் மற்றவர்களைப் போல் நடக்க ஏலாது. பிரஜைகளெல்லாம் கஷ்டகாலத்தில் வேறு பிரதேசங்களுக்

ருப் போகலாம். என்ன இடுக்கண் வந்த போதிலும் அரசன் மாத்திரம் அவனது ராஜ்யத்தை விட்டு அகலலாகாது-அவன் அரசு அழிந்தால் அதனுடன் அரசனும் அழிய வேண்டியதே.

ந. [சற்றுயோசித்து] ஆனால்---நாதா—இந்த யமவாதனை இன்னும் நான் எத்தனை நாள் அனுபவிப்பது?—என் பொருட்டு நான் வருத்தப்படவில்லை—ஆயினும் நமது ஏழு மைந்தர்கள் படும் துயரத்தை என்னால் சகிக்க முடியவில்லை—நாதா—இதை நான் கேட்பது தவறு என்று என்மனதில் தோன்றியபோதிலும்— எப்படியும் கேட்டுத்தான் தீரவேண்டுமென்று எனக்குள் ஏதோ ஒன்று என்னை உந்துகிறது. நீங்கள் வராவிட்டாலும்---நமது மைந்தர்களை அழைத்துக் கொண்டு நான் மதுரை போக விடை யளிக்கிறீர்களா?—என் நல்லண்ணனைப் பார்த்து எத்தனையோ வருடங்களாயின.

கா. [தனிமொழி] சரி !—சன்யாசி கூறிய மற்ற வார்த்தைகளும் மெய்யாகும் காலம் வந்து விட்டது போலும்—

[தன் மனைவிக்கு]

பெண்மணி, உன்னை அனுப்ப என் மனம் வரவில்லை—ஆயினும் உன்னைத் தடுக்க இஷ்டமில்லை. இனி நாம் கொஞ்சம் உறங்குவோம்; பொழுதும் சீக்கிரம் விடியும் போலிருக்கிறது. விடிந்ததும் விஸ்வேஸ்வரர் ஆலயத்திற்குப் போய் ஸ்தோத்திரம் செய்து விட்டு உங்களை யெல்லாம் அனுப்புகிறேன்.

காட்சி முடிகிறது.

---

## ஆறும் காட்சி

இடம்—காசி விஸ்வேஸ்வரர் ஆலயம்.

காலம்—அதிகாலை.

காசிராஜனும், நல்லதங்காளும் விஸ்வேஸ்வரர் லிங்கத்தைத் தொழுகின்றனர்.

கா. விஸ்வேசா ! என் மனைவியின் இச்சைப்படி அவளையும் என் மைந்தர்களையும், எனக்கு மனமில்லாவிடினும், மது

ரைக்கு அனுப்புகிறேன். அவர்களெல்லாம் உனது அடைக்கலம்.

ந. நாதா—உங்களைப்பிரிய எனக்கென்றும் மனமில்லா விட்டாலும் நமது மைந்தர்களைக் காப்பதன் பொருட்டு அவர்களை மதுரைக்கு அழைத்துச் செல்கிறேன். மன்னித்து எனக்கு விடை யளியும்—நாதா! நாம் எல்லோரும் மறபடியும் சந்தோஷமாய் ஒருங்கு சேர்வோம், உமாநாதன் கருணையினால் என்று என் உள்ளத்தில் ஏதோ சொல்லுகிறது.

கா. பதிவிரதா சிரோமணி, உன் வாக்கு பலிக்குமாக!—விடை பெற்றுக்கொள்ளுங்கள்.

[அவர்களை யெல்லாம் ஒவ்வொருவராகக் கட்டியணைத்து விடைகொடுத்தனுப்புகிறார்; அவர்கள் போனதும் அடியற்ற மரம்போல் மண்மீது சாய்கிறார்.]

காட்சி முடிகிறது.



# இரண்டாம் அங்கம்

## முதற் காட்சி

இடம்—காசியின் எல்லை.

காலம்—சூர்யோதயம்.

நல்லதங்காள் தன் ஏழுமைந்தர்களுடன் வருகிறாள்.

மூ·மை. அம்மா!—மதுரைக்கு வந்து விட்டோமா?

ந. அப்பா—இப்பொழுதுதான் மதுரைக்குப்புறப்படுகிறோம்.—அந்தோ! என்ன மூடத்தனமாய் நமது நாதன் தனக்கு விருப்ப மில்லை என்று குறித்தும் இவர்களை அழைத்துக் கொண்டு மதுரை போவதாகப் புறப்பட்டு விட்டேன்!—சரி, இனி யோசித்தப்பயனென்ன?

ஏ·மை. அம்மா, கால் நோகிறதம்மா?

ந. கண்ணே! வருந்தாதே நான் எடுத்துக் கொள்கிறேன்— [அப்படியே எடுத்துக்கொண்டு] சுகுணசேகரா நீ மூத்தவன் சந்திரவதனனை எடுத்துக் கொள்,—தேவசேனா, நீ உன் கடைசி தம்பியை எடுத்துக் கொள். மெல்ல நடந்து வாருங்கள், நாம் போக வேண்டியது நெடுந்தூர மிருக்கிறது.

காட்சி முடிகிறது.

---

## இரண்டாம் காட்சி

இடம்—ஓர் ஆரண்யம்.

காலம்—பகல்.

நல்லதங்காள் ஏழு மைந்தர்களுடன் வருகிறாள்.

ஐ·மை. தாகம்! தாகம்! [மூர்ச்சை யாகிறான்; நல்லதங்காள் அருகி லிருக்கும் சுனையிலிருந்து தண்ணீர் கொண்டுவந்து கொடுக்கிறாள்.]

மூ.மை. அம்மா! அதோ! புலி கர்ஜ்ஜிக்குது!—எனக்கு பயமாயிருக்குது அம்மா!

ந. கண்ணே! பயப்படாதே கடவுளை தியானித்துக்கொண்டு வா, இவ்வனவிலங்குகள் நம்மை யொன்றும் செய்ய மாட்டா.

நா.மை. அம்மா! அம்மா! என் காலில் முள் தைத்து விட்டது! முள் தைத்து விட்டது! நோவுகிறது! நோவுகிறது!

ந. இப்படிக் காட்டு அதை மெல்ல எடுத்து விடுகிறேன். [அப்படியே செய்கிருள்.]

மூ.மை. அப்பாடா! [ஒரு பாறை தடுக்கி கீழே விழுகிருன், கால் பெருவிரலில் ரத்தம் பெருகுகிறது.]

ந. அந்தோ! என்ன அபாயங்களெல்லாம் நேரிடுகின்றன! [தன் முந்தானையைக் கிழித்து அக்காயத்தைக் கட்டுகிருள்.]

ஐ. ஆ. ஏ. மை. அம்மா! பசிக்குது! பசிக்குது! [அழுகிருர்கள்] அப்பா, சுகுணசேகரா இவர்களை யெல்லாம் பார்த்துக் துக்கொள், அருகில் எங்காவது காய்கனி கிழங்குகள் கிடைக்கின்றதா வென்று பார்த்து வருகிறேன். [போகிருள்.]

காட்சி முடிகிறது.

—∞∞—

## மூன்ரும் காட்சி

இடம்—ஓர் அடர்ந்த காடு.

காலம்—பகல்.

ஒரு புறமாக ஒரு வேடன் படுத்துறங்குகிருன். மற்ெருரு புறமாக நல்லதங்காள் வருகிருள்.

ந. ஐயோ! எங்கு தேடியும் ஒரு கனி வர்க்கமும் என் கண்ணுக்குப் புலப்படவில்லையே! இரண்டு தினங்களாக என் மக்கள் பசி! பசி! என்று அலைகின்றனரே! ஏழை என் செய்வேன்?—என் நாதன் எங்களை விட்டுப் பிரிய மனமில்லாமலே விடை கொடுத்தார். அவரது சுகத்தைக்கருதி

நான் காசியிலேயே இருந்திருக்கவேண்டும். என் மைந்தர்களின் நலத்தைக் கருதி காசியை விட்டு வந்ததினால் இத்தொல்லைகளுக்கெல்லாம் நானும் ஆளாகினேன் அவர்களையும் ஆளாக்கினேன். கொழுனனையே தெய்வமெனக் கொள்ளாது குழந்தைகளைப் பாராட்டியதினால் நான் படவேண்டிய கஷ்ட மீதாகும்—ஹா! எந்தக் குழந்தைகளின் பொருட்டு நான் மதுரைக்குப் போகக் கருதினேனோ—அவர்களும் பாதிவழியிலேயே பசியால் மடிவார்கள் போலிருக்கிறதே!—ஹா! அதோ யாரோ மனிதன் உருவம்போல் தோன்றுகிறது!— [அருகிற் போய்]

ஆம், மனிதன் தான்—வேடன் போலிருக்கிறது—உறங்குகிறான்; இவனை எழுப்பிக் கேட்கலாமா ஏதாவது உணவு இக்காட்டில் கிடைக்குமா வென்று?—என் பாலர்களின் உயிரைக் காப்பதற்காக இதைச் செய்வதினால் என் பதிவிரதா தர்மத்திற்கு இது குறையாகாது—அகதிக்கு ஆகாயமே துணை!— [இன்னும் அருகிற் போய் கையைத் தட்டி]

ஐயா! வேடுவரே!—வேடுவரே!

வே. [கண் விழித்து பயந்தெழுந்து] அம்மா!—வனதேவதே!—வனதேவதே!—கோவிச்சுகாதே! இனிமேலே எம்பொண்டாடியே உட்டேட்டு வல்லே! மன்னிச்சுடு—மன்னிச்சுடு!

[தவடையில் போட்டுக்கொண்டு, பாதத்தில் விழுகிறான்.]

ந. ஐயா!—எழுந்திருங்கள்!—நான் வனதேவதை யல்ல!—நான் ஒரு ஏழை—ஸ்திரீ.

வே. இஸ்திரியா?—இஸ்திரி இண்ணா?

ந. பெண்பிள்ளை.

வே. பொம்மனாட்டியா!—[சுற்றிப்பார்த்து]—ஏ! பொம்பளே!—நீ யாரு நெசத்தே சொல்லு—இந்த காட்டுக்கு ஏன் வந்தே ஒண்டிமா?

ந. ஐயா, என் பெயர் நல்லதங்காள்—குலசேகரி என்பது என் நாதன் எனக்கு வைத்தப் பெயர்—நான் காசிராஜன் மனைவி—காசிராஜன் பெண்ஜாதி—

வே. ஏய்!--என்னு--ரொம்ப கதெயெல்லாம் எங்கிட்ட உடரே!—ராசா பொஞ்சாதிண்ணு இப்படிதான் இருப்பையோ?—உன் நகெ கிகெயெல்லாம் எங்கே?

ந. ஐயா, எங்கள் நாடு பஞ்சத்தினுல் பீடிக்கப்பட்டதினுல்—என் குழந்தைகளை அழைத்துக்கொண்டு மதுரைக்குப் போகலாமென்று வந்தேன்—

வே. என்னு!—பெரிய கரடி உடரே எங்கிட்ட!—காசி எங்கே இருக்குது—மருதெ யெங்கே யிருக்குது! என்னு—உம் புருஷனே உட்டேட்டு வந்தூட்டையோ—சண்டெ போட்டேட்டு?

ந. ஐயா! நான் என் புருஷனை விட்டு வந்தது உண்மைதான்—ஆயினும் நான் அவருடன் சண்டை போட்டுவிட்டு—வரவில்லை—ஐயா, இங்கே எங்காவது காய் கிழங்குகனிவர்க்கம் கிடைக்குமோ? நாங்கள் புசித்து இரண்டு நாட்களாகின்றன.

வே. உன்னே பாத்தா—பசிச்சி இருக்கறப்போலே தானிருக்குது—இந்தா — நான் சொல்லறத்தைக்கேளு — நானும் எம்பொண்டாட்டி—ஒரு கழுதே முண்டேயோடே—சண்டே போட்டேட்டு வந்தூட்டேன்—நீயும் உம்புருசனே உட்டேட்டு வந்திருக்கரே—என்னோடெ வந்தூடு-உம்பெரிலே எனக்கு ஆசையாயிருக்குது. நீ ரொம்ப அழவாயிருக்கரே—என் கழுசாடைக்காறு—நம்பரெண்டு பேரும் குடித்தனம் பண்ணலாம் இந்த காட்லே—நான் காட்லே வேட்டையாடி நல்ல நல்ல மானுங்கோ பச்சிங்கோ எல்லா கொண்டாந்து தரேே—ஏ—குட்டி—என்னு சொல்லரே!

[நல்லதங்காள் அருகில் நெருங்குகிறான்; இதற்கு முன்பாக இவன் மனைவி வேடுவச்சி ஒரு புறமாக வந்து ஒரு மரத்தின் பின் மறைந்து இவர்கள் பேசுவதையெல்லாம் மெல்ல ஒட்டுக் கேட்கிறாள்.]

ந. அடா! வேடா!—துராத்மா! துஷ்ட எண்ணத்துடன் என்னை நெருங்காதே!—காசிவாஸா! நீர்தான் என் கற்பைக் காக்க வேண்டும்—

வே. வரமாட்டே நீ?—ஓ! ஆறு உன்னே இஸ்துகினு போரேன்!

[நல்லதங்காள் கையைப்பற்றப் பார்க்க, அவள் ஓடிப்போய் ஒரு மரத்தின் பின் ஒளிந்து கொள்கிருள். வேடன் அவளைத் துரத்திக்கொண்டு போய் வேறொரு மரத்தின் பின் ஒளிந்திருந்த தன் பெண்சாதியின் கரத்தைப் பற்றுகிருன்.]

வே. ஆ! ஆப்டுகினே என் கைலே—உடமாட்டேன் இனிமேலே!

வேசி. ஆ! ஆப்டுகினே என் கைலே உன்னே உடறேனு பார் இனி மேலே!

[அவன் தலைமயிரைக் கெட்டியாய்ப் பிடித்துக் கொள்கிருள்.]

என்டா—எம்பவுனே! என்ன சொன்னே? நானு கழுதெ மூண்டே'—நானு கழுதாடே! நான் அழுவாயில்லையோ வுன் கண்ணுக்கு! இன்னொரு பொண்டாட்டி ஒணுமோ நீ கெட்ட கேட்டுக்கு! அந்த மவாராசி, ராசா பொஞ்சாரி, பாவம் எழு குட்டிங்களோடே வந்திருக்காங்கோ, அதுங்களே நானு வழியிலே பார்த்தே, பசியாலே தவிக்குதுங்கோ, அதுங்களுக்கு சாப்பாடு கேட்டா, அவுங்க கையே புடிச்சி இசுக்க பாக்கறையா! கழுதே மவனே!

[கையிலிருக்கும் துடப்பத்தால் புடைக்கிருள்.]

வே. இல்லேடி! இல்லேடி! இனிமேலக்கி இல்லே—உட்டுடு உட்டுடு என்னே!

வேசி. புத்தி வந்துதா! புத்தி வந்துதா! [புடைக்கிருள்.]

வே. வந்துது! வந்துது!

வேசி. இனிமேலக்கி இந்தமாதிரி செய்யமாட்டையே? இனிமேலக்கி என்னெ உட்டுட்டு ஓடிவரமாட்டையே! [புடைக்கிருள்.]

வே. இல்லே! இல்லே!

வேசி. மின்னே அந்தம்மாளுக்கும் அவங்க குட்டிங்களுக்கும் என்ன மாறு பழம் கிழம் கெழங்கு பறிச்சி கொடு.

வே. ஆவட்டும்—ஆவட்டும்— என்குடுமியே உட்டுடு!

வேசி. அத்தெ வுட்டா நீ ஓடிப்பூடமாட்டையா! வா இப்படியே—பறிச்சிக்கொடு. [தலைமயிரைப் பற்றி இழுத்துக்கொண்டு] நீ வா அம்மா சும்மா என்னோடே, பயப்படாதே.

ந. விஸ்வேசா! உன்கருணே! [அவர்களைப் பின் தொடருகிருள்.]

காட்சி முடிகிறது.

# மூன்றும் அங்கம்

## முதற் காட்சி

இடம்—ஒரு காடு.

காலம்—மாலை.

*மதுரையருகில் நாகமலையைச் சார்ந்த ஒரு காடு. ஒரு புறம் ஒரு பெரிய பொந்தையுடைய மரமொன்றிருக்கிறது. அதற்கெதிராக சில வேடர்கள் நடுவில் மூன்று கொம்புகளைக் கட்டி அதன் மத்தியில் ஒரு பானையைத் தொங்கவிட்டு அதில் மான் கறியைச் சமைக்கின்றூர்கள்; இன்னும் சிலர் சுற்றிலும் உட்கார்ந்து பாடிக்கொண்டிருக்கின்றனர்.*

மு.வே. அடே தம்பி, உம் மூட்டையிலே என்ன வைச்சிருக்கே?

இ.வே. ரெண்டு சிறுத்தெ புலிவால் தா அண்ணே ஆப்டுது எனக்கு —நீ என்ன கொண்டாந்தே?

மு. வே எனக்கு ரெண்டு குட்டிபுலிதான் ஆப்டுது.

மூ.வே. போடா! படுக்காளிபயல்களா! நானு ரெண்டு சிறுத்தே, மூணு கோணயி, நாலு மானு! இதுக்களெல்லாம் கொண்ணு அதும் வாலுங்களே மூட்டே கட்டி கொண்டாந்திருக்கரே!

நா.வே. எனக்கு ஒரு கெழட்டு நரிதாண்டா ஆப்டுது! நரிவாலுக்கு என்னமான கொடுப்பாரடா நம்ப ராசா—

மு.வே. முதுவுலே பூசேதாம் கொடுப்பாரு!—நரிவேட்டே என்னடா அது! அதுக்கானு பூனேவேட்டெ யாடக்கூடாது? நம்ப ராசா தான் சென்னரே புலி, சிறுத்தே, யானே, கோணயி, யெதாவது துஷ்டமிருகங்களே கொண்ணு அதும் வாலுங் களே கொண்டாந்தா தாண்டா காசு!—எலியும், பூனேயும் கொண்டாந்தா என்ன பொரயோசனம்?

இ. வே. அடே அண்ணெ! அந்த கடுவா ஆப்டுதா ராசாவுக்கு?

மு.வே. அதாம் அல்லாரையும் ஏய்ச்சிகினு அந்தமலெமேலே ஓடிப் பூட்டுதே, அங்கே எங்கேயானும் கொகையிலே பதுங்கி கினு இருக்கும்.

நா.வே. ஆறு அது ஆப்படரவரைக்கும் இந்த காடுதான் நமக்கு கதி! அத்தெ கொல்லாதே மருதைக்கு திரும்பாதில் லேண்ணு சவதம் பண்ணி யிருக்கிறுரே ராசா !

மு.வே. அடே தம்பி, அந்த மான்கறி வெந்துதா பாருடா?

இ.வே. [பதம் பார்த்து] இல்லே அண்ணே—பாதிகூட வேவலே— அது கெடா மானு அதுங்கறி கொஞ்சத்துலே வேவாது.

மு. வே. அடே தம்பி! அது வரைக்கும் என்னுமானு தெம்மாங்கு ஒண்ணு ஜோக்கா பாடு பாக்கலாம்.

மு வே. [பாடுகிறுன்.]

"சதுரகிரி மலேயோரம் சார்ந்திருக்கும் திருக்கள்ளி
அந்த திருகுக்கள்ளி பூவெடுக்க திரிந்தேனடி பலகாலம்"

நா.வே. [பாடுகிறுன்.]

"பருத்தி விளேயச்சே பலதரம் வந்த மச்சான்—நான்
ஒருத்தியிருக்கச்சே ஓடி வந்தா லாகாதோ."

ஐந்தாவது வேடன் வருகிறுன்.

ஐ.வே. அடே! பயகளா! என்னுடா இது? ராஜா அவரு மச்சானே காணுமிண்ணு காபுரா பண்ணிகினு இருக்காரு, நீங்க இங்கு உக்காந்துகினு பாடிகினு இருக்கறீங்களே! நாலாபக் கமும் போயி தேடிப்பாருங்கடா! கண்டு புடிச்சி இட்டார வனுக்கு ஒரு பெரிய கம்பிளி கொடுக்கரே இண்ணு சொல்லி யிருக்கராரு.

மு.வே. அந்த ஆசாமி பெரிய பயங்காளி மச்சா! எங்கேயானுலும் ஒளிச்சிகினு இருப்பாரு.

ஐ. வே. தேடிப்பாருங்கடாப்பா! இல்லாபோனு ராசா ரொம்ப கோவிச்சிகிவாரு.

[எல்லோரும் நான்கு பக்கமாகத்தேடப்போகிறுர்கள். அனைவரும் போனவுடன் மரப்பொந்திலிருந்து செந்திலதிபதி வருகிறுன். வந்து மான் கறியைப் பதம் பார்த்துவிட்டு, அங்கிருக்கும் வால்கள் மூட் டைகளே எடுத்துக்கொண்டு போய் அந்த மரத்தின் கிளேகளில் ஒவ்வொன்றுய்க் கட்டி விடுகிறுன்.

பிறகு அந்த மான்கறியை அபகரித்துக்கொண்டு மறுபடியும் மரப்பொந்திற்குள் ஒளிந்து கொள்கிறான்.]
நான்கு வேடர்கள் வருகிறார்கள்.

மு.வே. போடா! அந்த பயங்காளியே எங்கே இண்ணு தேடரது? எங்கேயாவது ஒளிச்சிக்கினு இருக்கும் அந்த கிருக்கு!— வாங்கடா, நம்ப மான்கறியே திண்ணூட்டு அப்புறம் வோணும்ணு தேடலாம்.

மூ.வே. அடடே! அண்ணே! எங்கேடா நம்பவால் மூட்டைங்களே காணோம்! யாரோ அமுக்கினு பூட்டாண்டா!

இ.வே. அடடே! மச்சா! இதோபாருடா திருடன் கால் சுவடு!
[அதைப் பின் தொடர்ந்து மரப்பொந்தருகில் போகின்றனர்.]

நா.வே. அடடெ! நம்பொ கொண்ண மிருகங்க வாலுங்கல்லாம் இந்த மரத்திலே தொங்குதடா!

மு.வே. இந்த பொந்துலே இருந்து என்னமோ சத்தம் வருதடா!
[நுழைந்து பார்க்கிறான்.]
அடடே! நம்ப ஆசாமி இங்கே இருக்கிறாருடா!—சின்ன எசமா! வாங்க வெளியே—மவாராசா உங்களே கூட்டியா ரச் சொன்னாரு.

மான்கறிபாத்திரத்தை எடுத்துக்கொண்டு சேந்திலதிபதி வருகிறான்.

இ.வே. அண்ணே! இதோ இருக்குதடா நம்ப மான்கறி!

மூ.வே. இவர் தாண்டா நம்ப மிருகங்க வாலுங்களெ யெல்லாம் தபாய்ச்சிகினு வந்தூட்டாரு.

சே. ஏண்டா! திருட்டுப்பசங்களா! நான் கொண்ண மானெ நானு சமைச்சி சாப்பிட்டுகினு இருந்தா உங்களுக்கெல்லாம் பொறுக்கலேயோ?

நா.வே. ஐயா! இந்த மிருகங்களெ கூட நீங்கதாம் கொண்ணங்களோ?

சே. சந்தேகமில்லாதே!-நான் அதுங்களையெல்லாம் கொண்ணு —மகாராசா கிட்ட காட்டரத்துக்காக வாலுங்களை எல்லாம் மரத்திலே தொங்கவிட்டிருக்கிறேன்! யாருடா இதுங்களை யெல்லாம் இந்த மரத்திலே கட்டினது? நீங்கயாராவது கட்டினங்களா?

மு.வே. நாங்க கட்டலே வாஸ்தவம் தான்; நாங்க கொண்ணோம்— நீங்க அதுங்களே மரத்திலே கட்டனீங்கோ!

[எல்லோரும் நகைக்கிறார்கள்.]

சே. ஏண்டா! உங்களுக்கு என்னயாளுலும் கேக்குதோ? இதோ போய் மகராசா கிட்ட சொல்லி உங்களை என்ன செய்யரேன் பாருங்க!

மு.வே. ஐயா! ஐயா! போகத்தான் போரைங்க—அந்த மான் கறியே கொடுத்து விட்டு போங்க.

சே. இந்தா போ! [வெறும் சட்டியை அவனிடம் கொடுத்து விட்டு விரைந்து போகிறான்.]

மு.வே. பச்சா! அத்தனை கறியும் தின்னூட்டுதுடா இந்த திண்டி போது!—ஒழிஞ்சது!—நப்ப இந்த மரத்துலே ஏறி வாலுங்களை அவுத்துகுவோம் இது வர்ரத்துக்குள்ளெ!

[மரத்தின்மீது ஏறுகின்றனர்.]

செந்திலதிபதி ஓடி வருகிறான். பின்புறத்திலிருந்து நல்லதம்பி மற்றொருபுறமாக வருகிறான்.

ந. பி. என்ன! என்னடா? இது?

சே. பூா! பூா!—பூா! [பொதால் என்று மரத்தின் கீழ் விழுகிறான்.]

ந. பி. என்ன நடந்த சமாசாரம்!—என்ன எதையாவது கண்டு பயந்தாே?

வேடர்கள். [கீழே குதித்து] ஐயா! ஐயா!—என்ன சமாசாரம்?

சே. மோகினி—மோகினி!—மோகினி!

ந. பி. மோகினியா?—என்னடாப்பா இது?

சே. அண்ணெமாரு! அண்ணெமாரு!

ந. பி. அண்ணன்மார்களா!—இதென்னடா பயித்தியம் முத்தி போச்சுதா என்ன?

வே. சின்ன எசமான், பொழுது விடிஞ்சி போச்சே! இப்போ மோகினியும் அண்ணெமாரும் எப்படி வருவாங்க வெளியே!

சே. [மெல்ல தலையைத் தூக்கி] தோ! தோ!—அந்த ஆலமரத்துப் பின்னாலே! பாருங்கோ! பாருங்கடா போயி!

ந. பி. என்னடா அது? பகலில் மோகினி வருமாடா—போய்ப் பாருங்களடா எதைப்பார்த்து பயந்தான் என்று.

[சிலர் அப்பக்கம் போகின்றனர்.]

ந. பி. செந்திலதிபதி—ஒன்றும் பயப்படாதே!—மனதைத் தேற்றிக்கொள்!—நானிருக்கிறேன். என்ன பார்த்தாய் நீ? கனவு ஏதாவது கண்டாயா?

சே. கனாகண்டேனு! நீங்க ஒணும் போயி பாருங்க—வெள்ளெபொடவே கட்டிக்கினு மோகினியும்—ஏழு அண்ணெமாரும் படுத்துகினு இருக்கராங்க!

போன வேடர்கள் திரும்பி ஓடி வருகின்றனர்.

வேடர்கள். ஆமாஞ் சாமி! ஆமாஞ் சாமி!

ந. பி. என்னடா அது ஆமாம்?

வே. தூரத்திலே யிருந்து பாத்தோம்!—மோவுனி—ஏழு அண்ணெமாரோடே படுத்துகினு இருக்குது!

ந. பி. என்ன ஆச்சரியம்!—வாருங்கள் என்னுடன்—பயப்படாதீர்கள். [அவர்களை அழைத்துக்கொண்டு போகிறார்; செந்திலதிபதி மரப்பொந்திற்குள் போய் மறைத்து வைத்திருந்த மான்கறியைக் கொண்டு வந்து சாப்பிடுகிறான்.]

காட்சி முடிகிறது.



## இரண்டாம் காட்சி

இடம்—காடு.

காலம்—அதிகாலை

*காட்டில் ஒரு பெரிய ஆலமரத்தின் கீழ் நல்லதங்காள் தன் ஏழு மைந்தருடன் பசியால் களைத்துப் படுத்துறங்கிக்கொண்டிருக்கிறாள். நல்லதம்பி வேடர்களுடன் வருகிறார்.*

ந. பி. என்ன ஆச்சரியம்!—யாரோ ஒரு பெண்பிள்ளை தான்!—ஏழு பிள்ளைகளுடன் இங்கு இந்த அடர்ந்த கானகத்தில் வந்து படுத்திருப்பானேன்?—உருவத்தை நோக்கின் உத்தம ஸ்திரீயைப் போல் காண்கிறாள்! பசியால் மெலிந்திருக்கின்றனர் போலும் எல்லோரும். அடே! நீங்கள் ஒன்றும் பயப்படவேண்டாம்—இது மோகினியுமல்ல — இவர்கள் அண்ணன்மார்களுமல்ல—ஒருவர் அந்த ஓடைக்குப் போய் ஜலம் கொண்டு வரட்டும்— [இருவர் போகின்றனர்.] உடலில் ஒரு ஆபரணத்தையும் காணோம்—இச்சிறுவர்களெல்லாம்—இப்பெண்ணின் குழந்தைகளாக இருக்குமா?
[வேடர்கள் தண்ணீர் கொண்டுவர அதை அவள் முகத்தில் தெளிக்கிறார்.]

ந. [களைத்தீர்ந்து எழுந்து] ஐயா! ஐயா!—நான் ஒரு அனாதையான ஸ்திரீ!—என்னை ஒன்றும் செய்யாதீர்கள்.

ந. பி. அம்மா! நீ ஒன்றும் பயப்படவேண்டாம். உனக்கு அபயம் தந்தேன்!—நீ யார்? இக்குழந்தைகள் யார்? இங்கே இக்கானகத்தில் வந்து ஏன் படுத்திருக்கிறீர்கள்?

ந. ஐயா வேடரே, உமது முகத்தைப் பார்த்தால் நற்குணமுடையவர் போல் தோற்றுகிறது. இந்த மற்ற வேடர்களையெல்லாம் ஒரு புறம் போயிருக்கச் சொல்லுங்கள்—என் விர்த்தாந்தத்தை உம்மிடம் ஒளியாது கூறுகிறேன்.

ந. பி. அப்படியே ஆகட்டும் அம்மா—அடே, நீங்கள் எல்லாம் ஒரு புறமாய்ப் போயிருங்கள்
[அவர்கள் அப்படியே செய்கின்றனர்.]
நீ யாரம்மா? உன் முகத்தை நோக்குங்கால் நீ உத்தம

குலத்திலுதித்த பெண்மணிபோல் தோன்றுகிறது—ஒன்றும் ஒளியாது உண்மையை என்னிடம் உரை.

ந. ஐயா—நான் காசிராஜன் மனைவி—இவர்கள் என் ஏழு மைந்தர்கள்—என் பெயர்—

ந. பி. நல்லதங்காள் !

ந. நல்ல தம்பி !

[செந்திலதிபதி மெல்லவந்து ஒரு மரத்தின் பின் பதுங்கி நடப்பதை யெல்லாம் கேட்கிறான்.]

ந. பி. அம்மா, இக்கதிக்கு எப்படி வந்தாய்? இங்கெப்படி வந்தாய்?

ந. அண்ணா, நான் விரைவில்—சுருக்கமாய்ச் சொல்கிறேன். காசியில்—ஏழு வருஷகாலமாய்—கடும் பஞ்சம் நேரிட—அப்பாதை பொறுக்க முடியாமல்-என் மைந்தர்களை அழைத்துக்கொண்டு—மதுரைக்குப் போகலாமென்று வந்தேன்—வழி தெரியாமல் பல கஷ்டங்களை அனுபவித்து—இக்காடு வந்து சேர்ந்தோம்—பசியின் களையால்—

[மூர்ச்சையாகிறாள்.]

ந. பி. [அவளைத் தாங்கிப் படுக்க வைத்து] வேடர்களே! ஓடி வாருங்கள்! [வேடர்கள் வர] சீக்கிரம் நீங்கள் ஓடிப்போய் என் கூடாரத்தில் இளநீர்கள் இருக்கின்றன, அவைகளில் பத்து பன்னிரண்டு கொண்டுவாருங்கள். [வேடர்கள் ஓடுகின்றனர்.] ஐயோ ! என் தங்கைக்கு இக்கதி நேரிடவேண்டுமா ? பஞ்சத்தின் பாதையாலும் காசியிலிருந்து நடந்து வந்த கஷ்டத்தினால் மிகவும் இளைத்து முகம் மாறியிருக்கிறது. இதனால் தான் இவளை நான் இன்னாளெனக் கண்டு பிடிக்க முடியவில்லை—ஐயோ ! இச்சிறுவர்களுக்கும் இக்கஷ்டம் நேரிட வேண்டுமா ? பசியால் வருந்தி களைத்து உறங்குகின்றனர் போலும். [வேடர்கள் இளநீரைக் கொண்டுவர அதில் ஒன்றை நல்லதங்காள் வாயில் உண்பிக்க அவள் கொஞ்சம் கொஞ்சமாக களை நீங்கிக் கண் விழித்து எழுந்திருக்கிறாள்.]

அம்மா, அப்படியே சற்று இளப்பாறு; உன் குழந்தைகளுக்

கும் இதைக்கொடுத்து அவர்கள் களையைக் கொஞ்சம் தீர்க்கிறேன். [அப்படியே செய்ய அவர்களும் மெல்ல எழுந்திருக்கின்றனர்.]

பசியால் பாதைப்பட்டவர்களுக்கு இளநீரைப்போல் எதுவும் களையை சீக்கிரம் அகற்றுது. இதில் கொஞ்சம் இன்னும் புசியுங்கள்.

குழந்தைகள். அம்மா—இது யாரம்மா?

ந. குழந்தைகளே! இவர்தான் உங்கள் மாமா—இவருடைய ஊருக்குத்தான் உங்களை யெல்லாம் இவ்வளவு கஷ்டத்திற்குள்ளாக்கி அழைத்து வந்தேன்.

மூ. மை. இவர்—வேடராயிருக்கிறாரே அம்மா? அம்மா—எங்க மாமா—ராஜா இண்ணுங்களே.

ந. பி. அப்பா கண்மணி—நான் அரசன் தான்—மதுரை அரசன்—காட்டில் வேட்டையாட வேண்டி இக்கோலத்தில் வந்திருக்கிறேன்.

ந. அதனால்தான்—நானும் உங்களை முதலில் பார்த்தபொழுது கண்டு பிடிக்க முடியாமற் போயிற்று.

மூ. மை. அம்மா நம்போ—சீக்கிரம் மதுரைக்கு போகலாமே—சாப்பிட.

ந. அண்ணா, வாருங்கள் சீக்கிரம்—நமது ஊருக்குப்போவோம் மதுரை இன்னும் ஒரு காதத்திற்குள் இருப்பதாகச் சொன்னார்களே.

ந. பி. அம்மா—அப்படியே செய்வோம்—ஆயினும் ஒரு சமாசாரம்—நான் மதுரையை விட்டு நேற்று வேட்டைக்குப் புறப்பட்டபொழுது இக்காட்டில் சில தினங்களாக ஆடு மாடுகளையும் வழிப்போக்கர்களையும் அடித்து ஹிம்சித்துக்கொண்டிருந்த ஒரு பெரும் புலியைக் கொன்றொழிய திரும்புவதில்லை என்று பிரதிக்ஞை செய்துகொண்டு புறப்பட்டேன். ஆகவே அதை சீக்கிரம் முடித்துக்கொண்டு நான் உடனே வந்து விடுகிறேன். உங்களை யெல்லாம் என்பரிவாரங்

களுடன் அனுப்புகிறேன்; நீங்கள் உடனே என் அரண் மனைக்குச் செல்லுங்கள்; அங்கு என் மனைவி அலங்காரி யிருக்கிறாள்; அவள் உங்களுக்கு வேண்டிய உணவு முதலி யன உதவுவாள்; இதற்குள்ளாக நானும் என் வேலையை முடித்துக்கொண்டு வந்து விடுகிறேன்.

ந. அப்படியே அண்ணா,—மைந்தர்களே— உங்கள் மாமாவிடம் விடைபெற்று வாருங்கள்.

மு.மை. மாமா நாங்கள் வருகிறோம்—சீக்கிரம் மதுரை வந்து சேருங்கள்.

ந. பி. போய்வாருங்கள் — கண்மணிகளே!—இதோ சீக்கிரம் நானும் வந்து விடுகிறேன்—உம்—காட்டிலிருந்து உங்க ளுக்கு ஏதாவது வேண்டுமா?

அனைவரும். மான் குட்டி வேணும்! மான் குட்டி வேணும்!

ந. பி. அதென்ன மான் குட்டியின் மீது அவ்வளவு பிரியம்?

ந. இவர்கள் காசியில், ஒரு மான் குட்டியை வளர்த்து வந்தார் கள்—அதனால் அதன் மீது அவ்வளவு பிரியம்.

ந. பி. அப்படியே உங்களுக்கு ஒரு நல்ல மான்குட்டியைப் பிடித்து வருகிறேன்; அஞ்சாதீர்கள்-அடே உங்களில் சிலர் இவர்களை யெல்லாம் சீக்கிரம் மதுரைக்கு அழைத்துக்கொண்டுபோய் —என் அரண்மனையில் அந்தப்புரத்தில் விடுங்கள்—என் மனைவியிடம். [வேடர்கள் ஒரு புறம் அவர்களையெல்லாம் மரி யாதையாக அழைத்துச் செல்கின்றனர்.]

காட்சி முடிகிறது.





# நான்காம் அங்கம்

## முதற் காட்சி

இடம்—மதுரையில் அரண்மனை மேல்மாடி.

காலம்—

அலங்காரி சயனத்தில் வீற்றிருக்க பல தாதியர் அவளுக்கு சுஸ்ருஷை செய்து கொண்டிருக்கின்றனர். கனகாம்புஜம் தலைவாரிப் பின்னிக்கொண்டிருக்கிறாள்.

அ. ஏண்டி நீலா! எத்தனை தரம் சொல்லியிருக்கிறேன்!

[அவளைக் காலால் உதைத்து]

காலில் அந்தப் பாடகத்தைக் போடும்போது நோகாமல் போடவேண்டுமென்று!—ஏனடி கனகி! உனக்கென்னகேடு காலம்! என் தலைமயிரை ஏன் பிடித்திழுக்கிறாய்?

[அவளைக் கன்னத்தில் புடைக்கிறாள்.]

க. இல்லை அம்மா! [கன்னத்தைத் துடைத்துக் கொள்கிறாள்.]

அ. ஏனடி!—கன்னத்திலே அப்படி தொட்டால் அதற்கு இப்படி என்னமோ பசப்புகிறாயே!—காட்டு கன்னத்தை!

[அதில் விரல் தழும்பு இருப்பதைக் கண்டு]

கனகம்—நீ கீழே போ—மஹாராஜா வரப்போகிறார்—இன்றைக்கெல்லாம் அவர் எதிரில் வராதே! வந்து ஏதாவது அவரிடம் இதைப்பற்றி ஒரு வார்த்தையாவது சொன்னாயோ—பிறகு அவர் எதிரிலேயே உன்னைக் கொன்று குழி வெட்டிப் புதைத்து விடுவேன். உன் பெரியப்பா சிபாரிசெல்லாம் என்னிடம் ஒன்றும் சாயாது. அதோ யாரோ வருகிற சப்தம் கேட்கிறது, போ சீக்கிரம் கீழே!

[கனகாம்புஜம் அழுதுகொண்டே போகிறாள்.]

சேந்திலதிபதி விரைந்து வருகிறான்.

சே. அக்கா! அக்கா!—மச்சி நமது அரண்மனைக்கு வர்ராங்க!

அ. அது யாரடா அது மச்சி?

சே. அதுதான் அக்கா! பத்து வருஷத்துக்கு முன்னே கலியாண மாச்சே! காசி ராஜாவுக்குக் கலியாணம் பண்ணிக் கொடுத்தாரே அத்தான்! அப்புறம் நம்ப அரண்மனையிலே இருக்கிற நகைங்களை யெல்லம் சீதனம் இண்ணு வாரி கொடுத்தூட்டாரே அத்தான்!

அ. நல்லதங்காளா!

சே. ஆமாம் அவுங்கதான்!—ஏழு குட்டிங்களே இழுத்துகினு வர்ராங்க!

அ. ஏழு குழந்தைகளைப் பெற்றுவிட்டாளா சண்டாளி!—எனக்கு இன்னும் ஒரு குழந்தையும் பிறக்கவில்லையே என்ன தவஞ் செய்தும்!—உம்!—இருக்கட்டும் ஏனடா வந்தாள் அவள் இப்பொழுது? இருக்கிறதையும் ஏதாவது சுற்றிக் கொண்டு போகலாம் என்று வந்தாளோ?—போதாக் குறைக்கு ஏழுகுட்டிகளையும் இழுத்தக்கொண்டு!

சே. இல்லெ அக்கா, நான் அவுங்க பேசனதையெல்லாம் மறைஞ்சி கேட்டுகினு இருந்தேன். அவுங்க ஊர்லே என்னமோ கருப்பாம்! அதுக்காக குழந்தைங்களே இட்டுகினு இங்கே வந்தூட்டாங்களாம்!

அ. அப்படியா சமாசாரம்! இங்கேயும் வந்து எல்லாவற்றையும் துடைப்பதற்குப் பார்க்கிறாளா?—இது தான் சமயம் இவள் மீது தக்கபடி பழிவாங்க! மஹாராஜா கூட வருகிறாரா? வேட்டை முடிந்து விட்டதா?

சே. இல்லே மகாராஜா அந்த பெரிய புலியைக் கொன்றுதான் திருப்பரதாகச் சொல்லி யிருக்கிறார்; சாயங்காலமாவது நாளைக்காவது வருவார் என்கிறார்கள்; முன்னமே இவர்களை யெல்லாம் பல்லக்கில் அனுப்பி யிருக்கிறார். நான் குதிரை மேலேறிக்கொண்டு சீக்கிரம் வந்தேன் உன்னிடம் இதைச் சொல்ல.

அ. ஆஹா! வர்ராளா கழுதை நாறி! வரட்டும் வரட்டும்! அரண்மனையிலிருந்த சொத்தை யெல்லாம் வாங்கிக்

கொண்டு போனது மில்லாமல், மறுபடியும் வருகிறாளா இன்னும் ஏதாவது இருக்கிறதா என்று பார்த்துக் சுரண்டிக்கொண்டு போக! எப்பொழுதாவது ஒரு நாள் நம்முடைய வீட்டிற்கு வராமற் போகிறாளா பார்ப்போம் என்றிருந்தேன்; இப்பொழுது நல்ல சமயம் வாய்ந்தது —பசியோடே வருகிறாள்! வரட்டும்—உம் இது தான் நல்ல யுக்தி! மஹாராஜா வருமுன் இங்கு நில்லாதபடி இவளைத் துரத்தவேண்டும்—அவர் வந்தால் முன்போல் ஏதாவது இவளுக்கு மறுபடியும் மரியாதை செய்யவேண்டும் என்று நான் இத்தனை வருடங்களாகச் சேகரித்து வைத்த ஆடையாபரணங்களுக்கு வழி வைப்பார்!—தம்பி, எங்கே வந்து கொண்டிருக்கிறாள் அவள்?

மச. அதோ பார் அக்காள்!—அதோ இப்பொழுதுதான் நமது கோட்டை வாயிலில் நுழைகிறாள் தன் மக்களுடன்.

அ. [எட்டிப்பார்த்து] ஆமாம்!—நீ உடனே சென்று நமது அந்தப் புறத்து கதவைச் சாத்திவிட்டு, நமது தாதியர்களுக்கெல்லாம் என்ன இடித்தாலும் கதவைத் திறக்கக் கூடாதென்று கட்டளை யிட்டுவா! நமது அரண்மனையில் சமைத்திருக்கும் பண்டங்களை யெல்லாம் இங்கு மேல் மாடியில் கொண்டு வந்து வைத்து பூட்டி விடச்சொல். ஒருவேளை அவள் உள்ளே வந்தாலும் யாரும் அவளுடன் ஒரு வார்த்தையும் பேசக்கூடாதென்று நான் கட்டளை யிட்டதாகச் சொல். சீக்கிரம் போ!

சே. அப்படியே ஆகட்டும்! என்னெ கண்ணாலம் பண்ணிக மாட்டேண்ணு அல்லா! [விரைந்து போகிறான்.]

காட்சி முடிகிறது.



## இரண்டாம் காட்சி

இடம்—அந்தப்புர வாசல்.

காலம்—பகல்.

*கதவு பூட்டப்பட்டிருக்கிறது. அதன் ஒருபக்கம் பலகணி இருக்கிறது. நல்லதங்காள் தன் மைந்தர்களுடன் வருகிருள்.*

நா. என்ன ஆச்சரியமாயிருக்கிறது நம்மைப் பல்லக்கில் தூக்கிக்கொண்டுவந்த ஆட்கள் விடை பெற்றுச் சென்றபின் உள்வாயிலிற் பிரவேசித்த பிறகு ஒருவராவது நம்முடன் பேசவில்லை. அந்தப் புரத்து தாதியர்கள் ஒருவரையும் காணேம்! இக்கதவும் உள்ளே பூட்டப்பட்டிருக்கிறாற் போலிருக்கிறது. [கதவைத் தட்டிப் பார்க்கிருள்.]
யார் உள்ளே? மதனி! மதனி!

குழந்தைகள். அம்மா! பசிக்குது! பசிக்குது!

நா. ஐயோ! மக்களா! இவ்வளவு தூரம் பொறுத்துக்கொண்டிருந்தவர்கள் இன்னும் கொஞ்சம் பொறுத்துக்கொண்டிருங்கள்! உங்கள் மாமி உங்களுக்கெல்லாம் நல்ல அறுசுவை உண்டி அளிப்பார்கள்.

கனகாம்புஜம். [பலகணிவழியாகப் எட்டிப்பார்க்கிருள்.]

நா. அம்மா—

கன. ஸ்! [கையால் மெல்ல சைகை செய்து அருகில் அழைத்து காதில் ஏதோ சொல்லிவிட்டு மறைகிருள்.]

நா. அந்தோ! இப்படியு மிருக்குமா என்கதி!—ஐயோ! என் மதனிக்கு நான் ஒரு கெடுதியும் செய்யவில்லையே! அவர்கள் ஏன் என் மீது இவ்வாறு கோபிக்கவேண்டும். அகதிக்கு ஆகாயமே துணை! ஆகாயவாணியே!—என் அநாதையான மக்களை நீதான் ஆதரிக்கவேண்டும்!

[திடீரென்று பூட்டப்பட்ட கதவு திறக்க மக்களுடன் உள்ளே நுழைகிருள்.]

காட்சி முடிகிறது.



## மூன்றும் காட்சி

இடம்—அரண்மனை மேல்மாடியில் ஓர் அறை.

காலம்—பகல்.

ஒரு சயனத்தின் மீது சாய்ந்துகொண்டு, தாதியர் தின்பண்டங்களை எடுத்துக்கொடுக்க அலங்காரி புசித்துக்கொண்டிருக்கிறாள்.

கனகாம்புஜம் வருகிறாள்.

க. மஹாராணி! மஹாராணி! அந்த அம்மா தன் குழந்தைகளுடன் அந்தப் புரத்திற்குள் நுழைந்து விட்டார்கள்! இங்குதான் வருகிறார்கள்!

அ. ஏனடி! கதவைச் சார்த்தி விடச்சொன்னேனே!

க. கதவைத்தாளிட்டேன்!—பிறகு உடனே அந்த அம்பாள் தட்டிப்பார்த்தார்கள்— பிறகு தெய்வீகமாய் அக்கதவு திறந்து கொண்டது!

அ. தெய்வீகம்!—எனக்கு உன் கதை யெல்லாம் தெரியும்! நீதான் திறந்து விட்டிருப்பாய்! அடி திலகம், அமிர்தம், இக்கழுதையை! இழுத்துக்கொண்டுபோய்ப் பக்கத்து அறையில் அடைத்து வையுங்கள். பிறகு இவளைச் சிட்சிக்கும் விதத்தில் சிட்சிக்கிறேன்!

[திலகமும் அமிர்தமும் அப்படியே செய்கிறார்கள்.]

அடி தாதிகளே, அந்த மூதேவி படியேறி வருகிறாள் போலிருக்கிறது! உடனே க்ஷணத்தில் இத்தின்பண்டங்களையெல்லாம் பக்கத்து அறையில் மறைத்து வைத்து விட்டு வந்து படுத்துக்கொள்ளுங்கள். வாயைத் திறக்காதீர்கள்.

[தாதியர் அப்படியே செய்கின்றனர்; அலங்காரி மிகவும் களைப்புடையவள் போல் சயனத்தில் படுத்துக்கொள்கிறாள்.]

நல்லதங்காள் மைந்தர்களுடன் படியேறி வருகிறாள்.

ந. மதனி!—மதனி!—என்ன படுத்துக்கொண்டிருக்கிறார்கள்!—தாதியரும் படுத்துக்கொண்டிருக்கின்றனர்!—எழுப்பிப் பார்ப்போம்!—மதனி! மதனி! [தட்டி எழுப்புகிறாள்.]

அ. [சீறி எழுந்து] எந்த கழுதை என்னை தட்டி எழுப்புகிறது! —ஆ! நீயா! வாடியம்மா! வா!

ந. என்ன மதனி, உங்களுக்கு உடம்பு?

அ. உடம்பொன்றுமில்லை. உங்கள் அண்ணன் புலிவேட்டைக்குப்போயிருக்கிறார். அவர் சுகமாய்த் திரும்பி வருமளவும் நாங்கள் எல்லாம் உபவாசமிருக்கிறோம்—அடுப்பைக் கூட மூட்டாது—ஒன்றும் புசியாது—அவர் சீக்கிரம் சுகமாய்த் திரும்பி வர வேண்டுமென்று மீனாட்சியைப் பிரார்த்தித்துக் கொண்டு!

குழந்தைகள். அம்மா!—பசிக்குது!—அம்மா!—ஏதாவது தின்னக் கொடுங்களம்மா!

ந. மதனி—நான் பொறுத்துக்கொண்டிருக்கிறேன்—இக் குழந்தைகளுக்கு ஏதாவது பழமாவது இருந்தால் கொஞ்சம் கொடுங்கள்.

அ. ஐயோ! அம்மா! நான் என்ன சொல்லப்போகிறேன்! இந்த வருஷம் இங்கேயும் சரியாக மழை பெய்யாமல் ஒரு பழமும் காய்க்கவில்லை, நாங்களும் திண்டாடுகிறோம், பயிரும் சரியாக விளையவில்லை, அரண்மனையில் கூட பாதி அரிசியைத் தான் காய்ச்சிக்குடிக்கிறோம்!

[இதைச் சொல்லிக்கொண்டிருக்கும்பொழுது பக்கத்து அறையில் ஜன்னல் வழியாகப் கனகாம்புஜம் ஜாடை காட்டி அழைக்க, சில குழந்தைகள் மெல்ல அங்கு போய் சில பழங்களையும் மிட்டாய்களையும் எடுத்துக்கொண்டு வருகின்றன.]

குழந்தைகள். அம்மா! அம்மா! இதோ பழம்! பலஹாரம்!

[தின்னப் பார்க்கின்றனர்.]

அ. [அவைகளை வெடுக்கென்று பிடுங்கிக்கொண்டு] ஆஹா! என்ன துடுக்கு! அவர்கள் சவுக்கியமாய்த் திரும்பிவந்தவுடன் மீனாட்சி சுந்தரேஸ்வரர்களுக்கு நிவேதனம் செய்ய வைத்திருந்த பழங்களையும் பலஹாரங்களையும் தூக்கிக் கொண்டு வந்து விட்டதுகளே!—எல்லாம் நாளைக்கு

மஹாராஜா வந்தவுடன் புசிக்கலாம்! நாங்கள் எல்லாம் பட்டினி யிருக்கிறது நீங்கள் மாத்திரம் புசிக்கிறதோ!—ஏனடி கனகம்! இப்படியா இப்படி!

[கனகம் பக்கத்து அறையிலிருந்து மெல்ல வருகிருள்.]

இவைகளையெல்லாம் வைத்திருக்கு மிடம் இந்தத் துடுக்குப் பசங்களுக்கு நீதான் சொல்லி யிருக்கவேண்டும்! யாரடி அங்கே? திலகம், அமிர்தம்! சீக்கிரம் வாருங்களிப்படி—இவைகளைக் கொண்டுபோய் அறையில் வைத்துவிட்டு—இந்த மட்டிக் கழுதையை பாதாள கெவியில் கொண்டு போய் அடைத்து வையுங்கள்.

[திலகமும், அமிர்தமும் வந்து பழங்களையும் பலஹாரங்களையும் கொண்டு போகின்றனர்.]

ந. [பெருமூச்செறிந்து] மதனி பாபம் அந்தப் பெண்ணின் மீது கோபியாதீர்கள்! என் பிள்ளைகள் செய்த—தப்பிதம்! அந்தப்பெண் என்ன செய்யும் பாபம்.

அ. எல்லாம் இந்தப் பெண் சூதாகும் இல்லாவிட்டால் இந்தப் பயல்களுக்கு பழம் பலஹாரம் இருக்குமிடம் எப்படித் தெரியும்!—இழுத்துக்கொண்டு போங்களடி கீழே இவளை!

[திலகமும், அமிர்தமும் அப்படியே செய்கின்றனர்.]

ந. மதனி!—கொஞ்சம் தயவு செய்யுங்கள்!—நான் வேண்டுமென்ருல் உங்களுடன் பட்டினி யிருக்கிறேன். அண்ணன் வருகிற வரையில் இக்குழந்தைகளுக்கு மாத்திரம் ஏதாவது ஒரு கவளம் கொடுங்கள்—பசியாற!

அ. அரண்மனையில் இன்று ஒன்றும் சமைக்கவில்லையே!

ந. கொஞ்சம் அரிசி யிருந்தால் கொடுங்கள்—நான் சமைத்துக் கொள்கிறேன்.

அ. என்னப் பிடிவாதக்காரியம்மா!—நாங்கள் எல்லாம் பட்டினி யிருக்கிறோமே, நீயும் உன் குழந்தைகளும் இருந்தால் என்ன கெட்டுப்போய் விடுகிறது! உன் அண்ணன் மீது அவ்வளவு பட்சம்!—அரண்மனையிலிருந்த அரிசியெல்லாம் நேற்று பிராம்மண போஜனத்துக்காக செலவாய் விட்டது,

கொஞ்சம் கேழ்வரகு தான் இருக்கிறது.—அதை வேண்டுமென்றால் சமைத்துக்கொள். என் வேலைக்காரிகள் சமைக்க மாட்டார்கள் அவர்களெல்லாம் பட்டினியால் வாடி வதங்கியிருக்கிறார்கள்.

ந. அப்படியே மதனி.

அ. அடி திலகம், அமிர்தம், வாருங்களிப்படி.

அமிர்தமும், திலகமும் வருகிறார்கள்.

திலகம்,—இந்த அம்மா—காசிராஜா பெண்சாதி—இவர்களை கீழே அழைத்துக்கொண்டுபோய், அறைபடி கேழ்வரகு கொடு—தன் ஏழு—குழந்தைகளுக்கும், கஞ்சி வார்க்க வேண்டுமாம்.

[திலகம் நல்லதங்காளையும் ஏழுமைந்தர்களையும் அழைத்துக்கொண்டு போகிறாள்.]

[அவர்கள் போனதிசையைப் பார்த்து கையை முறித்து] உன் ஆணவத்தையெல்லாம் அடக்குகிறேன் வா! அரண்மனையிலிருந்த சொத்தை யெல்லாம் அபகரித்துக்கொண்டு போனவளல்ல!—இவர்களையெல்லாம் இன்றிரவிற்குள் எப்படியாவது விறட்டவேண்டும். அவர் வந்தால் பிறகு சங்கடமாகும்!—இதுதான் வழி—அடி அமிர்தம், அடுப்புக்குக் கட்டை கேட்டால், நன்றாய்த் தண்ணீரில் ஊறி யிருக்கும் விறகுகள் நான்கைக்கொடு. போ சீக்கிரம்!

[அமிர்தம் போகிறாள்.]

காட்சி முடிகிறது.

## நான்காம் காட்சி

இடம்—மதுரை அரண்மனையின் கீழ் பாரிசத்தில் வெந்நீர்வைக்கும் அறை.

காலம்—

நல்லதங்காள் புகைந்து கொண்டிருக்கிற அடுப்பை வியர்வை சொட்ட ஊதிக்கொண்டிருக்கிறாள். பக்கத்தில் திலகம் நிற்கிறாள்.

ந. அம்மா! என்ன ஊதியும் இந்த ஈரக்கட்டைகள் பற்ற மாட்டேன் என்கின்றனவே! நான் என்ன செய்வது?—

அம்மா, உனக்குப் புண்ணியமாய்ப் போகிறது கொஞ்சம் இரண்டு மூன்று காய்ந்த சுள்ளிகளையாவது கொண்டு வந்து கொடேன்.

தி. அதெல்லாம் முடியாது—மஹாராணியின் உத்திரவில்லை.

ந. அன்னபூரணி! அன்னபூரணி! இனி நீதான் கதி!

[மறுபடியும் ஊத, திடீரென்று தீப்பற்றி சுடர் விட்டெரிகிறது.]

தி. என்ன ஆச்சரியம்! [அறைக்கு வெளியே ஓடுகிறாள்.]

ந. அம்மட்டும் இவ்வளவாவது நமக்குக் கிடைத்ததே தெய்வானுகூலத்தால்! மதனிக்கு நான் என்ன கொடுமை செய்தேன் அவர்கள் என்னை இவ்வாறு ஹிம்சிக்க! அரண்மனையில் ஒன்றுமில்லை என்று கூறியதவ்வளவும் பொய்!

அலங்காரி விரைந்து வருகிறாள்.

அ. பொய் என்ன அதில்! நீதான் இங்கிருந்து போகும்போது எல்லாவற்றையும் சுரண்டிக்கொண்டு போனாயே!—அடி அம்மா! இதென்ன நெருப்பு இப்படி எரிகிறதே! அவியடி! அவியடி!—வீடெல்லாம் பற்றிக்கொள்ளவேண்டுமென்று பார்க்கிறாயா என்ன!—அவியடி!

ந. மதனி, இதனைத் தணிக்க ஜலமில்லையே—

அ. ஜலமில்லா விட்டால், இந்தப் பானையிலிருக்கிற ஜலத்தையாவது கொட்டி அணை!—செய்யமாட்டாய் நீ!—நான் கத்துகிறேன், என்ன சும்மா தூணைப்போல் நிற்கிறாய்! அத்தனை ஆணவமா உனக்கு!

[எரிகிற ஒரு கட்டையைப் பிடுங்கி அதனால் பானையை மோத பானை உடைந்து ஜலம் வெளிவந்து அடுப்பு அணைந்து போகிறது.]

ந. ஆ! ஆ! மதனி! மதனி!—குழந்தைகள் பசியால் களைத்திருக்கிறார்கள்!

அ. எல்லாம் இருக்கட்டும்! ஒரு நாள் பட்டினியிருந்தால் இறந்து போகமாட்டார்கள்! அம்மட்டும் இந்த அரண்மனை எரிந்து போகாமற் காப்பாற்றினேனே!—ஏனடி

அம்மா! அரண்மனையை யெல்லாம் கலியாண மானவுடன் துடைத்துக்கொண்டு போய் விட்டாயே! இப்பொழுது ஏதாவது மிகுதி யிருக்கிறதா என்று பார்த்து அடியோடு அரண்மனையையே கொளுத்திவிட்டுப் போகலாமென்று வந்தாயோ! உன் அண்ணன் நாளை காலை வருகிறதாகச் செய்தி வந்தது, வரட்டும் அவரிடம் நீ செய்ததை யெல்லாம் சொல்லிவிடுகிறேன்! வந்தாயே அம்மா! என் குடியைக் கெடுக்க! அதுவும் ஏழு குட்டிகளை இழுத்துக் கொண்டு—உன் புருஷனையும் அழைத்துக்கொண்டு வரக் கூடாது? சரியாக—நவக்கிரஹங்களாகிவிடும்!—காசியிலே காலை வைத்தாய், அங்கே கருப்பாயிற்று! க்ஷாம தேவதை! இங்கேயும் வந்தாயா எங்கள் க்ஷேமத்தை யழிக்க! உன் அண்ணனாவது கொஞ்சம் சுகமாய் வாழவேண்டுமென்றிருந்தால் இங்கே ஒரு க்ஷணமும் நில்லாது வந்த வழி பார்த்து உன் ஊர் போய்ச் சேர்—வாடி திலகம்!

[திலகத்தை யழைத்துக்கொண்டு விரைந்து போகிறாள்.]

ந. [திகைத்து நின்று சற்று பொறுத்து] இப்படியும் இருந்ததா என்கதி!—வேண்டுமெனக்கு! அப்பொழுதே சொன்னார் என் புருஷன்! பிறந்த வீட்டிற்கு அழையாமல் நான் போகலாகாதென்று! அவர் வார்த்தையை மீறி நடந்ததின் பலனைப் பெற்றேன்! இனி என்ன இருக்கிறது! இந்த அவமானத்தை பெற்றபின் நான் உயிர்வாழலாகாது! திரும்பிப் போக எனக்குச் சக்தியிருந்தாலும் அவரிடம் போய் இம்மாதிரியான அவமானத்தை அடைந்தேன் என்று எந்த முகத்துடன் நான் சொல்வேன்!—என் அண்ணன் நாளைகாலைதான் வருவாராம்!—வந்தும் எனக்கென்ன பலன்! அவரிடம் இதையெல்லாம் சொல்வேனாயின்—அவர் தன் பெண்சாதியின் மீது கோபிக்கப் போகிறார்!—வேண்டாம்-அவர்களாவது சுகமாய் வாழட்டும். முன் ஜென்மத்தில் எந்த சதிபதிகளைப் பிரித்தேனோ அந்த பாபத்திற்காக இந்த ஜன்மத்தில் என் கணவனிடமிருந்து பிரிக்கப் பட்டு இந்த இன்னலுக்கெல்லாம் ஆளாயினேன்—இனியும்

வேண்டாம்! ஏதோ நான் பூர்வ ஜன்மத்திற் செய்த பாபத்திற்காக இவ்வுடலைப் போக்கிக் கொண்டால்தான் நல்லது. மறுஜன்மத்திலாவது சுகமாய் வாழலாம். பக்கத்தறையில் என் ஏழு மைந்தர்களும்—களைத்து உறங்குகிறார்கள்—அவர்களையும் அழைத்துக்கொண்டு—ஐயோ!—நான் படிந்தபின் அவர்கள் கதி என்னவாவது!—நான் இருக்கும் பொழுது அவர்கள் கதி இப்படி இருக்கிறதே!—உம்!—அதுதான் யோசனை!—காசிவிஸ்வேசா! அன்னபூரணி!—மீனாட்சி சுந்தரேசா!—நான் செய்யத்துணிந்ததை நீங்கள் மன்னிப்பீர்களாக!

[கண்களைத் துடைத்துக்கொண்டு மெல்ல அறைக்கு வெளியே போகிறாள்.]

காட்சி முடிகிறது.

---

# ஐந்தாம் அங்கம்

---

## முதற் காட்சி

இடம்—ஆனைமலைக்குப் போகிறவழியில் காட்டில் ஒரு பாழ் மண்டபம்.

காலம்—இரவு.

அதில் திண்ணைதூங்கி, தொன்னை நக்கி, எச்சில் பொறுக்கி எனும் மூன்று சோம்பேறிகள் படுத்து குறட்டை விட்டுக்கொண்டு தூங்கிக்கொண்டு இருக்கின்றனர்.

**தி. தூ.** [கண்விழித்து] என்னடா பெரிய எய்வா போச்சி! கொஞ்சம் தூங்கலாமின்னு பாத்தா! இந்த ரெண்டு பட்டிக் காட்டானுகளும் கொரட்டே உட்டு எழுப்பிடராங்க!—டேய்! தொன்னெ நக்கி கொறட்டே உடரேடா!

**தொ.** [கண்விழித்து] ஏம்பா எழுப்பரே என்னே! இப்போதான் கண்ணெ மூடினெ!

**தி. தூ.** நாலு ஜாமமா கொறட்டே உட்டு தூங்கரான்! இப்போ கண்ணே மூடறனும்!—அந்த கொறட்டெயெ நிறுத்துடா! எனக்கு தூக்கம் வர்லே!

தோ. எம்பா ! நானிண்ணு வுனக்கு எளக்காரமாயிருக்குதோ ?—நானு கொறட்டொட்டே! அதோ பார் எச்ச பொறுக்கி தான் கொறட்டே உடரான்—வானரம் உறுமற மாதிரி !

தி. து. கொஞ்சம் எளுப்புடா அவனே !

[என்று சொல்லிவிட்டுத் தான் தூங்க ஆரம்பித்து கொறட்டை விடுகிறான்.]

தோ. அடே ! தம்பி எச்செ பொறுக்கி, எளிந்திருடா ! அண்ணெ எளுப்பச் சொல்ராருடா உன்னே !

எ. [கண்விழித்து] என்னண்ணேன் இது ?—என் தூக்கத்தே கெடுக்கரே !

தோ. தம்பி—கொறட்டெவுடாதெடா, அண்ணென் கோவிச்சுக் குது !

எ. நானு கொரட்டெ உட்டே ! அதோ பார்! அண்ணெந்தான் உர் உர் இண்ணு கொறட்டே வுடுது.

தோ. ஒ ! தானு கொறட்டெ உட்டேட்டு நம்ப பேர்லேயே போடுது—ஆனு நீயும் இத்தனைநாழி கொறட்டே வுட்டே! சும்மா தூங்கு போ ஆனு.

எ. நானில்லே அண்ணெ—

[மறுபடியும் தூங்க ஆரம்பித்து குறட்டை விடுகிறான்.]

தோ. சரிதான் !—ரெண்டு பேரும் துருத்தி ஊதர மாதிரி புஸ் புஸ் இண்ணு ஆரம்பிச்சாங்க!

[தானும் தூங்க ஆரம்பித்து, உரக்க குட்டை விடுகிறான்.]

நல்லதங்காள் ஏழு மைந்தர்களுடன் மெல்ல வருகிறாள்.

மு.மை. அம்மா ! என்னால் இனி நடக்க முடியாது, இந்த மண்டபத்தில் படுத்து கொஞ்சம் தூங்கலாம்.

ந. மைந்தா !—கொஞ்சம் பொருத்துக்கொண்டிரு, இன்னும் கொஞ்ச தூரம் தான் பிறகு எல்லோருமாக ஒரே முட்டாய் உறங்கி விடலாம்—இங்கு யாரோ மனிதர்கள் இருக்கிறார்கள், அவர்களைக் கேட்டுப் பார்க்கிறேன்—அண்ணமாரே-அண்ணமாரே !—உறங்குகின்றார்கள்-அண்ணமாரே!

தி. தூ. ஏண்டா! என்னைத் தூக்கத்தில் எழுப்பத்தேவலே இண்ணு சொல்லலே!

[காலால் பாதத்தருகில் படுத்திருக்கும்தொன்னே நக்கியை உதைக்கிறான்.]

தொ. ஏண்டா! கால் சும்மா இருக்கலேயோ!

[அவன் கால் மாட்டிலிருக்கும் எச்சில் பொறுக்கியை உதைக்கிறான்.]

எ. ஏனடா! என்னெ உதைக்கிறே!

[அவன் கால் மாட்டிலிருக்கும் திண்ணை தூங்கியை உதைக்கிறான்.]

தி. தூ. ஏன்டா! படுகாளிப்பயலே!

[எழுந்து எச்சில் பொறுக்கியை கன்னத்தில் அறைய அவன் தூக்க சமயத்தில் தொன்னே நக்கியை அறைய எல்லோருமாக ஒருவரை யொருவர் அடித்துக்கொண்டு எழுந்திருக்கின்றனர்.]

ந. அண்ணமாரே!—இங்கே ஏதாவது கிணறு அருகில் இருக்கிறதா?

எ. அதெல்லாம் கெடையாது போ!- எங்க தூக்கத்தெ கெடுத்துகினு!

தி. தூ. அடே!—யாரோ பாவம் பொம்மனாட்டிடா!

தொ. குட்டிப்பசங்களோடே வந்திருக்கிறாடா பாவம்!

தி. தூ. என்னம்மா வோணும் ஒனக்கு?

ந. அண்ணமாரே!—எங்களுக்கு மிகவும் களைப்பாயிருக்கிறது. இங்கே எங்காவது கிணறு இருந்தால் சொல்லுங்கள் அதில் இறங்கி—வயிறு நிரம்ப—தண்ணீர் குடித்து—எங்கள் துயர் தீருவோம்.

தி. தூ. அதோ!—அந்த ஐயனார் கோவில் பக்கத்துலே ஒரு கிணறு இருக்குது போம்மா?—போவும்போது ஒரு தாம்பு கயிறு எடுத்துகுனுபோ! தண்ணீ ரொம்ப கீழே இருக்குது.

ந. ஐயா, இதைத் தெரிவித்தற்காக உங்களுக்கு நமஸ்காரம்—நான் வருகிறேன்.

[குழந்தைகளை அழைத்துக்கொண்டு போகிறாள்.]

எ. ஒண்ணு - ரெண்டு—மூணு—நாலு—அஞ்சி— ஆறு—ஏழு —எத்தினி குட்டிங்கடா!

தி. தூ. அடே! கண்ணுபடப் போவுதுடா.—அப்பறம் அவுங்களுக்கு என்னமாறு வரப்போவுது!—

எ. இந்த மாதிரி எல்லாரும் குட்டிப்போடரத்தனுலேதான் நம்ப வாய்க்கி சோறு ஆப்பிடலே!

தி. தூ. அடே! சத் அதனப் பிரசங்கி!—தூங்குடா! போ!—

[மறுபடியும் எல்லோருமாகப் படுத்துக்கொண்டு குறட்டை விட்டுத் தூங்குகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

—∞∞—

## இரண்டாம் காட்சி

இடம்—அய்யனுர் கோவிலருகில் ஒரு பெருங்கிணறு.

காலம்—இரவு.

ஒருபக்கமாக ஏழுமைந்தர்களும் படுத்து உறங்குகின்றனர். நல்லதங்காள் அவர்கள் முகத்தை கவனித்தவண்ணம் இருக்கிறாள்.

ந. எல்லோரும் களையால் தூங்கி விட்டனர்!—இதுதான் சமயம்! இவர்கள் விழிப்பார்களாயின் இக்கொடிய செயலைச் செய்ய எனக்கு மனோதிடம் வராது—பெற்றமக்களைக் கொல்லும் பெரும் பாதகி யாகிறேனே! இது என் ஊழ்வினைப் பயனோ?—அல்லது இப்பிறப்பிலிழைத்த பாபத்தின் பிராயச்சித்தமோ?—உம்! புறப்படும்பொழுதே போக வேண்டாமெனச் சொன்னரே!—கணவன் வார்த்தையைக் கடந்து வந்ததின் பாபமிது! தாய்வீடு அழையாதிருக்கும் பொழுது தானுக அங்கு எந்த தையலும் செல்லலாகாது! அப்படிச் சென்றால் எப்படியும் அவமானத்திற்கிடமாம் என்று ஆன்றோர் கூறிய வார்த்தை மெய்தான்! இதையெல்லாம் யோசித்துக்கொண்டிருந்தால் எனக்குப் பிறகு பித்தம் பிடித்துபோம்!—பிறகு என் மக்களின் கதி என்னவது! சீக்கிரம் இவர்களை ஒவ்வொருவராக இக் கிணற்றில் போட்டு விட்டு நானும் குதிக்கவேண்டியது தான்—என்னை

யுமறியாதபடி இச்செய்கையைச் செய்யும்படி ஏதோ என்னை உந்துகிறது!—அந்தோ! நான் பெற்றபிள்ளை—சீ! இதைப்பற்றி யோசித்தால் என் மனம் கலங்கிபோம்—விரைவில் இவ்வேலையை முடிக்கவேண்டும்—

[தன் கடைசி மைந்தனைத் தூக்கி]

கண்ணே! நான் கடைசியிற் பெற்ற கண்மணியே! உன் உயிருக்கு நானே யமனாகிறேன்!—பெற்றவளுக்குக் கடைசி பிள்ளை—பெற்றவனுக்கு முதல் பிள்ளை என்னும் பழமொழியும் பொய்யாகிறதே!—நான் தாமதிக்கலாகாது!

[கிணற்றருகில் விரைந்து போகிருள்.]

கண்ணை மூடிக்கொள்வோம்!—ஈசனே! நீர் தான் என்னை மன்னிக்கவேண்டும்!

[கிணற்றில் அக்குழந்தையைப் போடுகிருள்.]

சிவ! சிவ! அந்த சப்தம் என் உடலை எரிக்கிறதே! நான் என் கண்ணைத் திறந்து எப்படிப் பார்ப்பேன்!—பார்க்கா திருக்கவும் கூடவில்லை!

[கண்ணைத் திறந்து கிணற்றுள் பார்த்து]

—கண்ணே! கண்ணே! மூழ்கிவிட்டாயா!

[கதறி வீழ்கிருள்; பிறகு சற்று பொறுத்து எழுந்திருந்து]

இனி யோசிப்பானேன்? ஒருமுறை துணிந்த பிறகு என்ன கஷ்டம்? [ஆரும் மைந்தனை எடுத்து]

மைந்தா! ஆரும் பிள்ளை ஆனைகட்டி வாழும் என்னும் பழமொழியும் உன்பால் பொய்த்ததே!

[கொண்டுபோய்க் கிணற்றில் போட்டுவிட்டு]

அமரருலகத்திலாவது நீ ஆனைகட்டி வாழ்வாயாக!—இவர்களை ஒவ்வொருவராகக் கொண்டு போவதென்ருல் நெடு நாழிகையாகும்—இரண்டு பெயரைக் கொண்டு போகிறேன்.

[ஐந்தாவது நான்காவது மைந்தர்களைக் கொண்டு போய்க் கிணற்றில் போடுகிருள்.]

நீங்களிருவரும் எப்பொழுதும் ஒன்ருய் விளையாடுபவர்கள், சுவர்க்கத்திற்கும் ஒன்ருய்ச் செல்லுங்கள்!—கிணற்றிற்குள் பார்ப்பேனுயின் எனக்குப் பயித்தியம் பிடித்துப் போகும்!—இப்பொழுது இல்லையா என்ன?—

[மூன்றாவது மைந்தனை எடுத்து]

கண்ணே! நேற்று நீ ஆற்றில் குளிர்ந்த ஜலத்தில் குளிக்க வேண்டுமென்று விரும்பினையே! இன்று உன் இஷ்டப்பிரகாரம் குளிர்ந்த ஜலத்தில் மூழ்கிஇரு!

[கிணற்றில் போடுகிறாள்.]

அந்தோ! அந்த சப்தம் என்னுயிரை யமவாதனைக்குட்படுத்துகிறதே!—சீக்கிரம் என்வேலையை முடிக்கவேண்டும்!

[ஓடிப்போய் இரண்டாவது மைந்தனைத் தூக்கிக் கொண்டு வருகிறாள்.]

இ.மை. [கண் விழித்து] அம்மா!—அம்மா!—என்னை எங்கே கொண்டு போகிறீர்கள்?

ந. உன் தம்பிமார்களிடம்!

இ.மை. எங்கே அவர்கள்?

ந. அதோ பார்! அங்கிருக்கிறார்கள்! [கிணற்றில் போடுகிறாள்.]

இ.மை. [கிணற்றுள் விழும்போது] அம்மா! அம்மா!

[இச்சமயம் முதல் மைந்தன் விழித்து எழுந்து பார்க்கிறான்.]

நல்லதங்காள் தலைவிரி கோலமாய்த் திரும்பி வருகிறாள்.

மு.மை. அம்மா!—என் தம்பிமார்கள் எங்கே?—அவர்களையெல்லாம்—கிணற்றிலா போட்டுவிட்டீர்கள்?

ந. ஆம்!

மு.மை. ஏன்?

ந. எனக்குத் தெரியாது!—எனக்கு பயித்தியம் பிடித்திருக்கிறது!— [ஓடப்பார்க்கும் முதல் மைந்தனைப் பிடித்துக் கொள்கிறாள்.]

மு.மை. அம்மா! எனக்கு பயமாயிருக்கிறது!—என்னை விட்டு விடுங்கள்!

ந. உன்னை மாத்திரம்—விட்டு விடலாகாது!—உன்னைக் கொன்று விட்டு—நானும் இறக்கவேண்டும்!

மு.மை. ஐயோ! ஏன்?—

ந. எனக்குத் தெரியாது. [இழுத்துக்கொண்டு போகிறாள்.

மு.மை. அம்மா! அம்மா!—என்னை மாத்திரம் விட்டுவிடுங்களேன்!—நான் தப்பித்துக்கொள்கிறேனே!—நீங்கள் இறந்தால்—

உங்களுக்கு நான் எள்ளும் தண்ணீரும் இறைக்கவேண்டாமா?—நமது வம்சம் விர்த்தியாக வேண்டாமா?—

ந. வேண்டாம்!—நான்—அந்தக் குழந்தைகள் விஷயத்தில் இதைக் கருதினேனா?—ஈசன் இதையேன் கருதவேண்டும்—என் குழந்தைகள் விஷயத்தில்!—

மூ.மை. அம்மா! அம்மா!—நீர் என்ன பேயா—பிசாசா?

ந. அதுதான் தெரியவில்லை!—

[அவனைத் தூக்கிக்கொண்டு போய்க் கிணற்றில் போடுகிறாள்.]

மூ.மை. [கிணற்றில் விழும்போது] பரமேஸ்வரா!—என் தாய் தந்தையரையாவது காப்பாற்றும்!

ந. ஏன்?—காப்பாற்ற வேண்டும்?—நான் பசியால் மடிந்த அத்தனை ஏழைகளில் யாரையாவது காப்பாற்றினேனா? இதென்ன இது? நான் யார்?—நல்ல தங்காளா?—பாண்டியா?—எத்தனை குழந்தைகள் எலும்பு எலும்பாய் உருகிச் செத்துக் கிடக்கின்றன!—எங்கே மறைந்தன? எங்கே போயின இறந்த குழந்தைகள்!—ஓ கிணற்றுள் இருக்கின்றன! [கிணற்றுள் பார்த்து]
ஓ!—இவைகள் என் மக்கள்! நான் நல்லதங்காளல்லவா?—என்ன ஆச்சரியம்! என் ஏழு குழந்தைகளையும் நான்—கிணற்றில் போட்டுக் கொன்றேன்!—அப்படி இக்கோரமான செய்கையைச் செய்தும்—என் மனதிலிருந்த—ஓர் பெரும் பாரம் நீங்கியது போல்—இருக்கிறதே! இதென்ன கனவா நினைவா? நினைவுதான்! [கிணற்றுள் பார்த்து]
அதோ! என் கண்மணிகள்! என்னையும் தம்முடன் வரும்படி அழைக்கின்றன போல் தோன்றுகிறதே! ஆம்—நான் மாத்திரம் உயிருடன் இருப்பானேன்?—நானும் கிணற்றில் விழுந்து மடிகிறேன்.—என்ன இது! என் தலையிலிருந்த சிறிது பாரமும் நீங்குவது போலிருக்கிறதே!——ஆம் ஆம்! நானும் மடியவேண்டும்!—மடியுமுன் என் அருமைக் கணவரும்—சகோதரரும் அறியும்படியாக—என் தாலியை இங்கு கழற்றி இப்பாரை மீது வைக்கிறேன். நான் பத்தினியாயின் இது அவர்களின் கண்ணுக்கு மாத்தி

ரம் என் மாங்கல்யமாகவும்—மற்றவர் கண்ணுக்கு பாம்பா கவும் தோன்றட்டும்! காசி நாதா! உமது கட்டளைப்படி —என் உயிரையும் கொடுக்கிறேன்!—இனியாவது எனக்கு —நற்கதி அளிப்பீராக!—விஸ்வேசா! நீயே கதி!

[கிணற்றுள் குதிக்கிருள்.]

காட்சி முடிகிறது.

---

# ஆரும் அங்கம்

---

## முதற் காட்சி

இடம்—நல்லதம்பி அரண்மனையில் படுக்கை யறை.

காலம்—காலை.

அலங்காரி படுக்கையின் மீது புரண்டு கொண்டிருக்கிருள்.

அ. அதோ! அவர் வருகிருற் போலிருக்கிறது—அப்பா!—அப்பா!—மார்பு நோய் பொறுக்க முடியவில்லையே!—உயிர் போகும் போலிருக்கிறதே!—சீக்கிரம் வாரும்! வாரும்!—என் உயிர் போகுமுன்—

ஒரு வேலைக்காரி விரைந்து வருகிருள்.

[பாசாங்கை விட்டு] நீ யாரடி? உன்னை யாரடி வரச்சொன்னது கழுதை முண்டை!—எங்கே அவர்?

வே. [மெல்லிய குரலுடன்] மஹாராஜா மிகவும் கோபங் கொண்டிருக்கிருர். வந்தவுடன் தன் தங்கை எங்கே என்று கேட்டார்—நாங்கள் எல்லாம் நீங்கள் சொல்லச் சொன்னபடி—அவர்கள் ஏதோ கோபித்துக்கொண்டு ஒன்றும் சாப்பிடாமல் எங்கேயோ போய்விட்டார்கள்—என்று தெரிவித்தோம்; பிறகு நீங்கள் எங்கே யென்று கேட்க—நீங்கள் அசௌக்கியமாயிருக்கிறப்பதாகத் தெரிவித்தோம், அதன் பேரில் அவர்—“நான் நம்பவில்லை ஏதோ சூது நடந்திருக்கிறது” என்று கோபித்து மொழிந்தார்.

அ. எங்கே யவர்?

வே. வேட்டை யுடையைக் களைந்து விட்டு ஸ்நானம் செய்யப் போயிருக்கிறார்!—அதோ மெத்தைப்படி யேறி வருகிறார்—உங்களுக்கு நான் விசிறிக்கொண்டிருக்கிறேன்.

[அப்படியே செய்கிறாள்.]

அ. நாதா! நாதா!—நான் நீர் அருகிலில்லாத சமயம் இறக்க வேண்டி வந்ததே!—வேட்டையை முடித்துக்கொண்டு சீக்கிரம் வரலாகாதா!-ஐயோ! மார்பு பிளந்து போகிறதே!— [புரளுகிறாள்.]

நல்லதம்பி விரைந்து வருகிறார்.

ந. பி. அலங்காரி!—என்ன உடம்பு உனக்கு?

அ. பிராணநாதா!—வாருங்கள்!—அப்பப்பா!—இப்பொழுதா வது வந்தீர்களே!—ஐயோ! மார்பு பிளந்து போகிறது—ஐயையோ!—முன்பு எப்பொழுதாவது வருமே அந்தப்—பாழும் மார்புவலி—இப்பொழுது வரவேண்டுமா?

ந. பி. வயித்தியர்களைக் கூப்பிட்டு ஏதாவது மருந்து வாங்கி சாப்பிட்டாயா?

அ. சாப்பிடலாமென்றுதான் இருந்தேன்; இதற்குள்ளாக——உங்கள் தங்கை தன் குழந்தைகளுடன் வந்தார்கள்—இத்தனை வருஷமாக வராதவர்கள் குழந்தைகளுடன் வந்தார்களே யென்று—நான் சந்தோஷப்பட்டு—அவர்களுக்கு உபசாரம் செய்யவும் முடியாமற் போயிற்று—இந்தப் பாழும்—மார்புவலியால்!—அப்பப்பா!— [புரளுகிறாள்.]

ந. பி. நான் போய் அரண்மனை வயித்தியரை அழைத்து வருகிறேன்—

அ. நாதா!—என்கதி எப்படியானாலும்—எனக்கு பெரிதல்ல—முன்பு உமது தங்கையையும் அவர்களுடைய அருமைக் குழந்தைகளையும் பாருங்கள்! அவர்கள் ஏதோ கோபித்துக் கொண்டு—இன்னும் போஜனம் கொள்ளாமலிருக்கிறார்கள்—ஐஐயோ!

ந. பி. ஏன்?—என்ன கோபம்?

அ. அது ஒன்றும் எனக்குத் தெரியவில்லை—வந்தவர்களை—எந்நோயையும் பாராமல் அன்போடு வரவழைத்து—முன்பு

போஜனம் கொள்ளுங்கள் என்று வேண்டினேன்—அதற்கு அவர்கள் உன் கையால் உணவிட்டால்தான் கொள்வோம் இல்லாவிட்டால்—முடியாது என்றார்கள்—இந்த ஸ்திதியில் நான் எழுந்திருக்கவும் முடியவில்லை,—"அம்மா, என்னை மன்னியுங்கள், நாளைக்கு என் கையால் உங்களுக்கு உணவிட்டு உபசாரம் செய்கிறேன்" என்று சொல்ல—உடனே மிகவும் கோபத்துடன் சரேலென்று போய் விட்டார்கள்!—

ந. பி. எங்கே?

அ. எங்கே போயிருக்கப்போகிறார்கள்? இந்த அரண்மனையில் தான் — எங்காவது இருப்பார்கள்—அப்பப்பா!—நாதா அவர்களைத் தேடிப் பார்த்து அவர்களுக்கும்—அவர்களுடைய குழந்தைகளுக்கும்—உங்கள் கையால் போஜனமிடும்—எனக்குப் பதிலாக—அப்பொழுது தான் என் மனம் சந்தோஷமடையும்—என் நோயும் கொஞ்சம் சுவஸ்தமடையுமென்று எண்ணுகிறேன்—

ந. பி. அப்படியே ஆகட்டும்—இதோ புறப்படுகிறேன்—நீ உன் உடம்பைப் பார்த்துக்கொள்—படுக்கையை விட்டு எழுந்திருக்காதே!—நான் வயித்தியருக்கும் உடனே சொல்லியனுப்புகிறேன்.

அ. முன்பு உமது தங்கையைப் பாருங்கள்—பிறகு வயித்தியருக்குச் சொல்லியனுப்பலாம்—நோய் கொஞ்சம் சுமாராகி வருகிறது.

[நல்லதம்பி போகிறார்.]

ஏனடி — அந்த கனகாம்புஜத்தை பாதாள குகையில்—அடைத்து வைத்திருக்கிறாயா—நான் சொன்னபடி?

[எழுந்து உட்காருகிறாள்.]

சரேலென்று நல்லதம்பி வருகிறார்.

ந. பி. அந்த பெரிய வயித்தியரை விட புதியதாய் வந்திருக்கிறாரா—அலங்காரி!—உன்னை நான் எழுந்திருக்க வேண்டாமென்று சொன்னேனே?—

அ. இல்லை நாதா?—உங்களைப் பார்த்தது முதல்—கொஞ்சம் மார்புவலி — சவுக்கியமாயிருக்கிறது — எந்நேரம் படுத்துக்

கொண்டிருக்கிறதென்று—கொஞ்சம் எழுந்து உட்கார்ந்து பார்த்தேன். [படுத்துக் கொள்கிறாள். நல்லதம்பி கோணிய முகத்துடன் போகிறார்.]

காட்சி முடிகிறது.

## இரண்டாம் காட்சி

இடம்—நல்லதம்பி அரண்மனையில் பாதாள கெவியின் வெளிப்புறம். ஒரு ஜன்னல் வழியாக பாதாளகெவி தெரிகிறது.

காலம்—பகல்.

நல்லதம்பி வருகிறார்.

ந. பி. ஏதோ சூது நடந்திருக்கிறது! எங்கு தேடியும் நல்லதங்காளையும் அவளது ஏழு குழந்தைகளையும் காணோம் அரண்மனை வேலைக்காரர்கள் எவரைக் கேட்டபோதிலும் மௌனம் சாதிக்கின்றனர். அலங்காரிதான் ஏதோ அவர்களுக்கு தீங்கு இழைத்திருக்கவேண்டும்—அவள் உடம்பு அசௌக்கியமென்று கூறியதெல்லாம் — மேல்வேஷம்!—இந்த கெவிக்குள் ஏதாவது அவர்களை அடைத்து வைத்திருக்கிறாளா? — பூட்டப்பட்டிருக்கிறதே! யார் உள்ளே?

கன. [உள்ளிருந்து] மஹாராஜா!

ந. பி. யார் அது?

கன. நான் தான்—கனகாம்புஜம்.

ந. பி. கனகாம்புஜம்!—நீ ஏன் இங்கிருக்கிறாய்? என் தங்கையும் அவள் குழந்தைகளும் உள்ளே இருக்கிறார்களா?

கன. இல்லை.

ந. பி. நீ ஏன் இங்கிருக்கிறாய்?

கன. மஹாராஜா! மெல்ல பேசும்—ராணி அறிந்தால் என்னைக் கொன்று விடுவார்கள்?

ந. பி. ஏன்? [ஜன்னல் அருகில் போய் நிற்கிறார்.]

கன. மஹாராஜா!— [அவர் காதில் ரகசியமாய்க் கூறுகிறாள்]

ந. பி. உம்!—உம்!—அப்படியா செய்தாள் பாவி!—

கன. மஹாராஜா, இதை உம்மிடம் நான் சொன்னதாகத் தெரிந்தால் மகாராணி என்னைக் கொன்று விடுவார்கள் என்னைக் காப்பாற்றி—அருளும்!

ந. பி. கனகாம்புஜம் நீ ஒன்றும் பயப்படாதே!—நான் முதலில் என் தங்கையையும் அவள் குழந்தைகளையும் தேடிக்கண்டு பிடிக்கவேண்டும்—அதுவரையில் நீ இங்குதானிரு. உனக்கு ரகசியமாக என் உடற் காவலாளி ஒருவன் மூலமாக உணவு அனுப்புகிறேன். நான் உனக்கு உத்திரவளிக்கும் வரையில் இந்த ரகசியத்தை என்னிடம் கூறியதாக ஒருவருக்கும் தெரிவிக்கவேண்டாம்—பெண்ணே! சுந்தரேசர் இருக்கிறார் உன்னைக் காப்பாற்ற—ஒன்றும் பயப்படாதே—நான் வருகிறேன். [விரைந்து போகிறார்.]

காட்சி முடிகிறது.

## மூன்றாம் காட்சி

இடம்—ஐயனார் கோயிலருகிலுள்ள கிணற்றருகில்.

காலம்—காலை

நல்லதம்பி வருகிறார்.

ந. பி. அந்த சோம்பேறிகள் கூறிய இடம் இதுதான்—அதோ அக்கிணறு! அந்தோ!—அக்கிணற்றில் மைந்தர்களுடன் விழுந்து விட்டாளோ என் தங்கை!—

[விரைந்து கிணற்றருகில் செல்கிறார்.]

இதோ அவள் தாலி!—சந்தேகமில்லை—கிணற்றில் தான் விழுந்திருக்கவேண்டும்! [எட்டிப் பார்க்கிறார்.]

ஐயோ!—அதோ என் தங்கையின் உடல்! ஒன்று!—இரண்டு!—அந்தோ! தன் ஏழு மைந்தர்களுடன் இதனுள் விழுந்து மடிந்திருக்கிறாளே! — மீனாட்சிசுந்தரேசா! — இதுவோ அவள் கதி!—இக்கோரமான காட்சியைக் காணும் படியாக—நான் எப்பிறப்பில் என்ன பிழை இழைத்தேன்!

[கிணற்றின் படிமீது சாய்ந்து புலம்புகிறார்.]

பாபி!—பாபி! என் தங்கையையும் அவளது ஏழு மைந்தர்களையும் கொஞ்சமேனும் பச்சாத்தாபமில்லாமல் இக்கதிக்குக்கொண்டுவந்த கொலை பாதகி! உன் மீது பழிக்குப் பழி

வாங்காது விடுவதில்லை!—மீனாட்சி சுந்தரேசர் மீது ஆணை'-[எழுந்து] முதலில் இச்சவங்களை வெளியில் எடுத்து அவைகளுக்குரிய ஈமச்சடங்குகளை முடிப்போம்—

[புறப்படுகிறார்.]

காட்சி முடிகிறது.

## நான்காம் காட்சி

இடம்—அதேயிடம்.

காலம்—சாயங்காலம்.

நடுவில் நல்லதங்காள் சவத்தைச் சிதையின்மீது வைத்து, சுற்றிலும் ஏழு மைந்தர்களை சிறு சிதைகளின் மீது வளர்த்தி, நல்லதம்பி எட்டுப் பிரேதங்களுக்கும் கொள்ளி வைக்கிறார்.

மௌனக் காட்சி.

காட்சி முடிகிறது.

## ஐந்தாம் காட்சி

இடம்—காசியில் விஸ்வநாதர் ஆலயத்தின் வெளி மண்டபம்.

காலம்—இரவு அர்த்தஜாம வேளை.

ஒரு மூலையில் மெலிந்த உடலும் மலிந்த உடையும் உடைய காசி மன்னன் கண் மூடித் தியானித்த வண்ணம் உட்கார்ந்திருக்கிறார்.

கா. காசி விஸ்வேசா! விஸ்வேசா! நீயே இனி அடைக்கலம் உன்னை யன்றி இப்பாபிக்கு உற்ற துணை வேறொருவரில்லை. இனியேனும் உன் மனம் இரங்காயா? இத்தனை வருடங்களாக உனது திவ்ய க்ஷேத்திரங்களையெல்லாம் சுற்றி உனக்குப் பணி செய்து வந்தும் இன்னும் என்னை வருத்தும் இப்பெருந்துயரம் தீர வழி கற்பிக்க உன் மனம் இளகவில்லையா?-அந்தோ! அம்மஹான் கூறிய ஏழு வருடங்களும் இன்றுடன் முற்று பெற்றனவே! இன்னும் என் கலி என்னை விட்டு அகலவில்லையே! என் ராஜ்யத்தையும் இழந்தேன்! எல்லா சுகங்களையும் இழந்தேன்—என் மனைவி மக்களையும் இழந்தேன்!—ஐயோ! அவர்கள் இப்பொழுது உயிருடன் இருக்கிறார்களோ—எக்கதியாயினரோ?—அவர்களைப்பற்றி நினைக்கும் போது என் மனம் திகிலடைகிறதே!

[மூர்ச்சித்து சாய்கிறார்; சற்றுபொறுத்து திடுக்கிட்டு கண் விழித்து !]

ஜகதீசா! காசிவாசா! அவர்களைக் காப்பாற்றும்!—என்ன இது?—நான் கனவு கண்டேனா என்ன?—என் மனைவியும்—என் ஏழு மைந்தர்களும்—ஒரு கிணற்றில் வீழ்ந்து மடிந்ததை நான் பார்ப்பது போலிருந்ததே!—இன்னும் அவர்களது மடிந்த உடல்களை நான் காணுவது போலிருக்கிறதே! இந்த யமவேதனையை அனுபவிப்பதை விட நான் என் உயிரை மாய்த்துக்கொள்ளுகிறேன்.

[எதிரில் இருக்கும் ஸ்தம்பத்தில் தன் தலையை மோதி மரிக்கப் பார்க்கிறார். அந்த ஸ்தம்பத்தின் பின் இருந்து திடீரென்று சச்சிதானந்தர் தோன்றி அவரைத் தடுக்கிறார்.]

ச. பன்னனே!—என்ன காரியம் செய்யத் துணிந்தீர்!

கா. மஹானே! மஹானே! வந்தீரா! வந்தீரா! என் ஜன்மம் புனிதமாயது! [அவர் பாதத்தில் பணிந்து]

ஸ்வாமி! இனி இப்பாவி இறப்பதற்கு விடையளியும்!

ச. வேண்டாம்! எழுந்திரு அப்பா! உன் பாபங்களெல்லாம் பரிஹரிக்கப்பட்டன.

கா. [முகமலர்ச்சியுடன் எழுந்திருந்து கை கூப்பி] ஸ்வாமி! நீரே எனக்குப் பிரத்யட்ச தெய்வம்! உமது பாதங்களைப்பற்றிய க்ஷணம், என்மீது மலைபோலிருந்த ஒருபெரும் துக்கமெனும் பாரம் நீங்கப் பெற்றவனானேன்!—என்ன விந்தை!—ஸ்வாமி இதன் ரகசியத்தையும், அன்று காசியில் எனக்கு என் பூர்வ ஜன்ம ரகசியத்தையும் சொல்வதாகச் சொன்னீரே அதைச் சொல்லியருளவேண்டும்.

ச. ஆம்—அதற்குக் காலம் வாய்த்தது இப்பொழுது—அப்பா, முற்பிறப்பில் நீ அங்கதேசாதிபதியாயிருந்து, உன் அயல் நாட்டரசன் ஒருவனை அநியாயமாய் அவன் கோட்டையில் முற்றுகை செய்து, பசியால் அவனும் அவனது மனைவிமக்களும் சைனியமும் அழியும்படிச் செய்தாய்—அதன் பிராயச்சித்தத்தை இந்த ஜன்மத்தில் நீ அனுபவிக்கும்படி நேர்ந்தது.

கா. அப்படியா நான் செய்தேன்?

ச. அதை உன் ஞானக்கண்ணால் பார்—

[அவர் முகத்தைத் தடவிக்கொடுக்கிறார், உடனே காசி மன்னன் அத்தோற்றத்தை தன் கண்ணெதிரிற் காண்பதுபோல் காண்கிறார்.]

கா. பாதகம்! பாதகம்! கோரபாதகம்!

[தன் கண்களைக் கைகளால் மூடிக்கொண்டு]

ஸ்வாமி! ஸ்வாமி! ஸ்வாமி! ஸ்வாமி! என்னைத் தண்டித்தது போதாது! போதாது! இன்னும் தண்டியும்! இக் கொடும் பஞ்சமா பாதகனை இட்சணம் பஸ்மீகரப் படுத்தும்!

ச. அப்பா! கண்விழி! கடைசியாக நீ செய்யவேண்டிய பிராயச்சித்தமும் செய்து முடிந்தது—இனி உனக்கு ஒரு வருத்தமும் வேண்டாம்—நீ சீக்கிரம் உன் ராஜ்யத்தையும்—மடிந்த மனைவி மக்களையும் பெறுவாய்!—அஞ்சாதே!—கண்விழி!

[மறைகிறார்.]

கா. [கண்விழித்து] என்ன ஆச்சரியம்! எங்கே என்குரு நாதர்!—அந்தோ மறைந்தனரே!—நான் கண்டதெல்லாம் கனவோ!

[காசி விஸ்வநாதர் கோயில் கதவுகள் தெய்வீகமாகத் திறக்க விஸ்வநாதர் காட்சி கொடுக்கிறார்]

இல்லை! இல்லை! உண்மைதான்! அதோ என் குருநாதர்! ஸ்வாமி! ஸ்வாமி ஏழையென் பொருட்டு இந்த அவதாரம் எடுத்தீரே! இதற்கு அடியேன் என்ன கைம்மாறு செய்யப் போகிறேன் இனி எனது உடல் பொருள் ஆவி உமக்கர்ப்பணம்! [சாஷ்டாங்கமாகப் பணிகிறார். வெளியில் பெரும் மழை பொழிகிறது.]

காட்சி முடிகிறது.



# ஏழாம் அங்கம்

## முதற் காட்சி

இடம்—மதுரையில் அரண்மனையில் நல்லதம்பியின் அந்தரங்க அறை.

காலம்—பகல்

சயனத்தில் நல்லதம்பி துக்கித்தவண்ணம் இருக்க, பக்கத்தில் அலங்காரி உட்கார்ந்து தேற்றிய வண்ணம் இருக்கிறாள்.

அ. நாதா! எல்லாம் அறிந்த உங்களுக்கு அடியாள் இச்சமயத்தில் என்ன தேறுதல் சொல்லக்கூடும்— அந்த உத்த

மிக்கும் அவள் குழந்தைகளுக்கும் இக்கதி நேர்ந்தது ஏதோ பூர்வ ஜன்ம விசேஷமாயிருக்கவேண்டும்.

ந. பி. வாஸ்தவம்!—வாஸ்தவம்!

அ. அவர்கள் உங்களுக்கு மாத்திரமல்ல உலகத்திற்கெல்லாம் தங்கையைப் போலிருந்தார்கள். அப்படிப்பட்ட நற்குண முடையவர்களுக்குத் தீங்கிழைத்தவர்களின் தீயகுணத்தை நான் என்னென்று சொல்வேன்!

ந. பி. அதைத்தான் நினைத்து—நானும் வருந்துகிறேன்.

அ. அவர்களைக் கிணற்றில் தள்ளியது மன்றி, அவர்களது டச்சைக் குழந்தைகளையும் கிணற்றில் விழும்படிச் செய்தார்களே! அப்பாதகர்களுக்கு பரமேஸ்வரன் என்ன கதியளிக்கப் போகிறாரோ? எப்படியும் அதற்கேற்றபடி பிராயச்சித்தம் செய்வார் நீர் அஞ்சாதீர்.

ந. பி. அலங்காரி! நீ சொல்வது மிகவும் உண்மை—அதற்குச் சந்தேகமில்லை.

அ. ஆகவே நடந்தது நடந்து விட்டது, இனி நம்முடைய மனதை நாமே தேற்றிக்கொள்ள வேண்டியதுதான். வருந்தியாவதென்ன? மாண்டவர்கள் மறுபடியும் வரப்போகிறார்களா?—நாமும் ஒருநாள் போகவேண்டியவர்கள் தானே!

ந. பி. ஆம் ஆம்—அதற்குக் கொஞ்சமும் சந்தேகமில்லை!

அ. ஆதலால் இப்படி ஊண் உறக்கமின்றி வருந்திக்கொண்டிருக்காதீர்கள்—ஏதாவது விநோதத்தின் மீது உமது மனதைச் செலுத்துங்கள்.

ந. பி. அலங்காரி! நீ சொல்வது மிகவும் உண்மை. என் மனதை இதனின்றும் முற்றிலும் மாற்றவேண்டும் — அப்படிச் செய்வதற்கு எனக்கு ஒரு நல்ல யோசனை தோன்றுகிறது. —நமது அரண்மனையில் சீக்கிரம் ஏதாவது ஒரு சுபகாரியம் நடந்தால்தான் இந்த அசுபமான காரியம் என் மனதை விட்டு அகலும்; ஆகவே உன் தம்பிக்கு—ஒருகலியாணத்தை முடிப்போம் சீக்கிரத்தில்.

அ. ஆம்—அது ஒரு நல்ல யோசனைதான்—அவனும்—என்னை அதற்காக அடிக்கடி தொந்திரவு செய்து கொண்டிருக்கிறான்.

ந. பி. மிகவும் சந்தோஷம்—நீ உடனே அவனிடம்போய் அவனுக்கு உன்பந்துக்களுள் எந்தப்பெண்ணைக் கலியாணம் செய்துகொள்ள இஷ்டம் என்று விசாரித்துவை. அப்படியே ஏற்பாடு செய்வோம்.—நான் உடனே புரோகிதரை வர

வழைத்து நாள் முதலியனவெல்லாம் குறித்துக்கொள்ளுகிறேன். இதைச் சீக்கிரம் செய்து முடித்தால்தான் என் மனம்—ஒருவாறு சந்தோஷமடையும்.

அ. எப்படியாவது தாங்கள் இத்துயரம் நீங்கி சந்தோஷமாயிருந்தால் போதுமெனக்கு. [விரைந்து போகிறாள்.]

ந. பி. ஆஹா! பாதகி! உன்னையும் ஒரு பெண் உருவமாய்ப் படைத்தானே பிரமன்! உன்னை படைத்து ஸ்திரீ ஜன்மத்திற்கே ஓர் பெரும் இழிவைப் படைத்தான் பிரமன்!—உன் குணத்தை இதுவரையில் அறியாமலிருந்தேனே பெரும் மூடன் நான்!—யார் அங்கே? சேவகா!—

ஓர் சேவகன் வாயிலருகில் வந்து நிற்கிறான்.

அரண்மனை சிற்பி வந்தானா?—

சே. மஹாராஜா, அவர் வந்து நெடுநாழியாயிற்று-ஆயினும் ராகு காலம்கழித்து சந்நிதானத்திற்கு வரலாமென்று காத்திருக்கிறார்—வெளியில்.

ந. பி. பெரிதல்ல—உடனே இங்கு அழைத்துவா அவனை!

[சேவகன் போகிறான்.]

நான் இடப் போகிற கட்டளைக்கு ராகு காலம் தான் ஆரம்பிக்க சரியான காலம்!—மீனாட்சி சுந்தரேசா! இந்நாட்டு அரசனுதல்பற்றி, குற்றம் செய்தவர்களைத் தக்கபடி தண்டிக்கவேண்டியது என் கடமை; அக்கடமைப்படி செய்வதற்காகவே இதற்கு இசைகிறேன்—ஆகவே தாங்கள் என்னை மன்னிக்க வேண்டும்.

அரண்மனை சிற்பி வருகிறான்.

சி. மஹாராஜா நமஸ்காரம்.

ந. பி. பத்தரே, அருகில் வாரும்—நான் இப்பொழுது உமக்கு ஒரு கட்டளையிடப்போகிறேன் அதை ஒருவரிடமும் வெளியிடலாகாது—வெளியிட்டால் உமது உயிர்போம்—

[அவன் காதில் ஏதோ ஓதுகிறார்.]

கூடிய சீக்கிரத்தில் இம்மண்டபத்தை முடிக்கவேண்டும்.

சி. அப்படியே மஹாராஜா! [வணங்கிப் போகிறான்.]

**காட்சி முடிகிறது**

## இரண்டாம் காட்சி

இடம்—மதுரை அரண்மனையில் ஆசார வாசலுக்கெதிரில் புதிதாய் நிர்மாணம் செய்யப்பட்டக் கலியாண மண்டபம்.

காலம்—பகல்

அதன் எதிரில் சாதாரணமான ஒரு மண்டபம் இருக்கின்றது. வாயிலருகில் நின்றுகொண்டு நல்லதம்பியும் அலங்காரியும் தங்கள் தங்கள் பந்துகளைக்யெல்லாம் வரவேற்கின்றனர். அலங்காரி தன் பந்துக்களையெல்லாம் கலியாண மண்டபத்தில் உட்காரும்படிச் செய்கிறாள். நல்லதம்பி தன் பந்துக்களையெல்லாம் சாதாரண மண்டபத்தில் உட்காரச் செய்கிறார்.

அ. [ஒரு புறமாக நல்லதம்பியிடம்] ஆதென்ன? உங்கள் பந்துக்களெல்லாம் கலியாண உடையில் வராது சாதாரண உடையில் வருகின்றார்களே?

ந. பி. [ஒருபுறமாக அவளிடம்] வேறென்ன காரண மிருக்கப் போகிறது? தங்கள் வீட்டுப் பெண் ஒருத்தியைக் கோராது, உன் பந்துக்களின் பெண்ணை உன் தம்பிக்குக் கலியாணம் செய்து கொள்ளுகிறாயே என்கிற பொறாமை தான்!—லக்னம் வந்து விட்டது—நீ விரைந்து சென்று கலியாணப் பிள்ளையையும் பெண்ணையும் கலியாண மண்டபத்திற்குள் வர வழைத்து உட்காரவை.

[அவள் அப்படியே செய்கிறாள்; வாத்யகோஷம் முழங்குகிறது.]

அ. பிராணநாதா, எல்லோரும் உட்கார்ந்திருக்கிறார்கள்—வாருங்கள் மணத்தை முடிப்போம்.

[இச்சமயம் நல்லதம்பி ஒரு விசையை முடுக்க கலியாணமண்டபம் இடிந்து அதன் கீழ் உட்கார்ந்திருப்பவர்கள் தலைமீது விழுந்து அவர்களையெல்லாம் கொல்கிறது; சபையில் பெரிய ஆரவாரம் உண்டாகிறது.]

ந. [அலங்காரியின் கரத்தை கெட்டியாய் பிடித்துக்கொண்டு] பாதகி! பெண்வடிவங்கொண்ட பேயே! போதுமா உனக்குப் பிராயச்சித்தம்! பசியால் மெலிந்து வந்த என் சகோ

வழைத்து நாள் முதலியனவெல்லாம் குறித்துக்கொள்ளுகிறேன். இதைச் சீக்கிரம் செய்து முடித்தால்தான் என் மனம்—ஒருவாறு சந்தோஷமடையும்.

அ. எப்படியாவது தாங்கள் இத்துயரம் நீங்கி சந்தோஷமாயிருந்தால் போதுமெனக்கு. [விரைந்து போகிறாள்.]

ந. பி. ஆஹா! பாதகி! உன்னையும் ஒரு பெண் உருவமாய்ப் படைத்தானே பிரமன்! உன்னை படைத்து ஸ்திரீ ஜன்மத்திற்கே ஓர் பெரும் இழிவைப் படைத்தான் பிரமன்!—உன் குணத்தை இதுவரையில் அறியாமலிருந்தேனே பெரும் மூடன் நான்!—யார் அங்கே? சேவகா!—

ஓர் சேவகன் வாயிலருகில் வந்து நிற்கிறான்.

அரண்மனை சிற்பி வந்தானா?—

சே. மஹாராஜா, அவர்வந்து நெடுநாழியாயிற்று-ஆயினும் ராகுகாலங்கழித்து சந்நிதானத்திற்கு வரலாமென்று காத்திருக்கிறார்—வெளியில்.

ந. பி. பெரிதல்ல—உடனே இங்கு அழைத்துவா அவனை! [சேவகன் போகிறான்.]

நான் இடப் போகிற கட்டளைக்கு ராகு காலம் தான் ஆரம்பிக்க சரியான காலம்!—மீனாட்சி சுந்தரேசா! இந்நாட்டு அரசனுதல்பற்றி, குற்றம் செய்தவர்களைத் தக்கபடி தண்டிக்க வேண்டியது என் கடமை; அக்கடமைப்படி செய்வதற்காகவே இதற்கு இசைகிறேன்—ஆகவே தாங்கள் என்னை மன்னிக்க வேண்டும்.

அரண்மனை சிற்பி வருகிறான்.

சி. மஹாராஜா நமஸ்காரம்.

ந. பி. பத்தரே, அருகில் வாரும்—நான் இப்பொழுது உமக்கு ஒரு கட்டளையிடப்போகிறேன் அதை ஒருவரிடமும் வெளியிடலாகாது—வெளியிட்டால் உமது உயிர்போம்— [அவன் காதில் ஏதோ ஓதுகிறார்.]

கூடிய சீக்கிரத்தில் இம்மண்டபத்தை முடிக்கவேண்டும்.

சி. அப்படியே மஹாராஜா! [வணங்கிப் போகிறான்.]

காட்சி முடிகிறது

## இரண்டாம் காட்சி

இடம்—மதுரை அரண்மனையில் ஆசார வாசலுக்கெதிரில் புதிதாய் நிர்மாணம் செய்யப்பட்டக் கலியாண மண்டபம்.

காலம்—பகல்

அதன் எதிரில் சாதாரணமான ஒரு மண்டபம் இருக்கின்றது. வாயிலருகில் நின்றுகொண்டு நல்லதம்பியும் அலங்காரியும் தங்கள் தங்கள் பந்துக்களையெல்லாம் வரவேற்கின்றனர். அலங்காரி தன் பந்துக்களையெல்லாம் கலியாண மண்டபத்தில் உட்காரும்படிச் செய்கிறாள். நல்லதம்பி தன் பந்துக்களையெல்லாம் சாதாரண மண்டபத்தில் உட்காரச் செய்கிறார்.

அ. [ஒரு புறமாக நல்லதம்பியிடம்] அதென்ன? உங்கள் பந்துக்களெல்லாம் கலியாண உடையில் வராது சாதாரண உடையில் வருகின்றார்களே?

ந. பி. [ஒருபுறமாக அவளிடம்] வேறென்ன காரணமிருக்கப் போகிறது? தங்கள் வீட்டுப் பெண் ஒருத்தியைப் கோராது, உன் பந்துக்களின் பெண்ணை உன் தம்பிக்குக் கலியாணம் செய்து கொள்ளுகிறாயே என்கிற பொறாமை தான்!—லக்னம் வந்து விட்டது—நீ விரைந்து சென்று கலியாணப் பிள்ளையையும் பெண்ணையும் கலியாண மண்டபத்திற்குள் வரவழைத்து உட்காரவை.

[அவள் அப்படியே செய்கிறாள்; வாத்யகோஷம் முழங்குகிறது.]

அ. பிராணநாதா, எல்லோரும் உட்கார்ந்திருக்கிறார்கள்—வாருங்கள் மணத்தை முடிப்போம்.

[இச்சமயம் நல்லதம்பி ஒரு விசையை முடுக்க கலியாணமண்டபம் இடிந்து அதன் கீழ் உட்கார்ந்திருப்பவர்கள் தலைமீது விழுந்து அவர்களையெல்லாம் கொல்கிறது; சபையில் பெரிய ஆரவாரம் உண்டாகிறது.]

ந. [அலங்காரியின் கரத்தை கெட்டியாய் பிடித்துக்கொண்டு] பாதகி! பெண்வடிவங்கொண்ட பேயே! போதுமா உனக்குப் பிராயச்சித்தம்! பசியால் மெலிந்து வந்த என் சகோ

தரி நல்லதங்காளையும் அவளது ஏழு மைந்தர்களையும் அவமானப் படுத்தி, உணவிடாமல் அரண்மனையினின்றும் துரத்தி, அவர்களை மடியச் செய்த உனக்கு—ஈசன் விதித்த தண்டனை ஈதாகும்! உன் கண் எதிரிலேயே உன் தம்பியும் உன் பந்துக்களும் ஒருங்கே மரித்ததை உன் கண்ணால் பார்க்கும்படிச் செய்தது!—பந்துக்களே! இதற்காகத்தான் உங்களிடம் காரணம் ஒன்றும் கூறாமல், சாதாரண உடையில் உங்களையெல்லாம் வரும்படி நான் ரகசியமாய்ச் சொல்லியனுப்பியது!—இட்சணம் முதல், இப்பாதகி என் மனைவியல்ல! இவளுக்குத் தண்டனை இன்னும் என்னவென்றால்—இவளது தலையை மழுங்க மொட்டையடித்து, முகத்தில் கரும்புள்ளி செம்புள்ளி குத்தி, கழுதையின் பேரில் ஏற்றி, மதுரைமாநகரைச் சுற்றிவரச் செய்து, சுண்ணாம்பு காளவாயில் கொண்டுபோய்ச் சுட்டுவிடுங்கள்!

[சபை ஆரவாரத்துடன் கலைகிறது.]

காட்சி முடிகிறது.



## மூன்றாம் காட்சி

இடம்—மதுரையில் வெளி வீதி.

காலம்—சாயங்காலம்.

மேற்சொன்னபடி அலங்காரியைக் கழுதையின் மீதேற்றி அரசன்சேவகர்கள் ஊர்வலமாகக் கொண்டு போகின்றனர். வீதியில் சிறுபிள்ளைகள் முதலியோர்.

“மூளி யலங்காரி
மூதேவி சிங்காரி”

[என்று கூவிக்கொண்டு அவள் மீது கல்லையும் மண்ணையும் வாரித் தூவிக்கொண்டு போகின்றனர்.]

காட்சி முடிகிறது.



# எட்டாம் அங்கம்

## முதற் காட்சி

இடம்—காசி மன்னன் கொலு மண்டபம்.

காலம்—பகல்.

காசிமன்னன் முடி சூடி சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கிறார். பக்கத்தில் மந்திரி சத்தியவாக் நிற்கிறார். எதிரில் சங்கீத கேளிக்கை நடக்கிறது.

கா. மந்திரி, போதும்—இதை நிறுத்தும்படி உத்திரவு செய்யும்.

[மந்திரி அவ்விதமே செய்கிறார்.]

பிரஜைகளே, எனது ராஜ்யத்தை நான் பெற்றேன் என்பதைவிட நீங்களெல்லாம் சுகமாய் இங்கு வந்து சேர்ந்தீர்களே என்பதுதான் எனக்கு அதிக சந்தோஷத்தைத் தருகிறது—இனி நீங்கள் விடைபெற்றுக் கொள்ளலாம்.

வயோதிகன் ஒருவன். மஹாராஜா! நாங்கள் விடைபெற்றுக் கொள்கிறோம். விஸ்வநாதர் கிருபையால் நீங்கள் இந்த ராஜ்யத்தையும் எங்களையும் பலவாண்டு காத்து சுகமாக வாழ்வீராக! அவரது கிருபையால் உமது மனைவி மக்களையும் பெற்று—உமது மனதிலிருக்கும் அந்த ஒரு குறையும் சீக்கிரம் நீங்குமாக!—நாங்கள் வருகிறோம்.

[பிரஜைகளெல்லாம் விடைபெற்று செல்கின்றனர்.]

கா. [பிரஜைகளெல்லாம் போன பின்பு] மந்திரி, இவ்வரசை நான் மறுபடியும் பெறுவதற்கு நீர் செய்த பேருபகாரத்தை என்றும் மறவேன்—ஆயினும் இன்று காலை—உமக்கு நான் கூறியபடி, இன்று மாலை விஸ்வேஸ்வரரைத் தொழுது விட்டு, மதுரைக்குப் புறப்படவேண்டும் நான்—அங்கு தான்—என் மனைவி மக்களைபெறுவேன்—அவர் கருணையால்—என்று நினைக்கிறேன்.

ம. மஹாராஜா, தாங்கள் ஒன்றும் கவலையுற வேண்டாம்; அப்படியே அவர்களை அடைவீர்களென்று என் மனதில் ஏதோ சொல்லுகிறது.

கா. அங்ஙனமே ஆகுமாக!—மந்திரி, நான் திரும்பி வரும் வரையில் நீர் இவ்விராஜ்யத்தை எனக்குப்பதிலாக காத்து வருவீராக.

ம. தங்கள் கட்டளை.

காட்சி முடிகிறது.

## இரண்டாம் காட்சி

இடம்—மதுரையில் அரசரது அந்தரங்க அறை.

காலம்—காலை.

ஓர் ஆசனத்தில் காசிமன்னன் துக்காக்கிராந்தனாய் வீற்றிருக்க பக்கலில் உட்கார்ந்து நல்லதம்பி தேற்றிய வண்ணம் இருக்கிறார்.

ந. பி. உமது மனைவியும் எனது தங்கையுமான அந்த உத்தமியும், உங்கள் மைந்தர்களும், மடிந்த விதம் இது தானென்று நினைக்கிறேன்—இவ்வாறு அவர்கள் அகாலமரணமடைந்ததற்குக் காரணமாயிருந்த என் மனைவியையும் நான் தண்டித்த விதத்தை உமக்குக் கூறி விட்டேன்—இனி ஒன்று தான் மிகுதி யிருக்கிறது. நான் கொஞ்சம் அஜாக்கிரதையாயிருந்தபடியால் இவ்வளவும் நேர்வதற்கிடங் கொடுத்தேன். ஆகவே என் உயிரைத் தாங்கள் வாங்கிக்கொள்ளும்.

[தன் உடைவாளை நீட்டுகிறார்.]

கா. மைத்துனரே! இதென்ன சாகசம்!—உம்மீது ஒரு குற்றமும் மில்லை—நான் அறிந்தபடி உமது மனைவி மீதும் குற்ற மில்லை. இதெல்லாம் என் ஊழ்வினைப் பயனென்று உறுதியாய் நம்புகிறேன்—நான் என் மனைவி மக்கள் மடிந்த கிணற்றைப் பார்க்க விரும்புகிறேன்—அவர்களை சம்ஸ்காரம் செய்த இடத்தையும் காண இச்சைப்படுகிறேன்.

ந. பி. [பெருமூச்செறிந்து] மைத்துனரே! உமது மன உறுதியை நான் என்னவென்று புகழ்வேன்!—இதோ உம்மை இப்

பொழுதே அங்கு அழைத்துச் செல்கிறேன்—போமுன் என் பூஜாக்கிரகத்தில் வைத்திருக்கும் உமது மனைவியின் மாங்கல்யத்தையும் உம்மிடம் ஒப்புவிக்கிறேன்—வாரும்—
[போகிறார்கள்.]

காட்சி முடிகிறது.

—∞∞—

## மூன்றாம் காட்சி

இடம்—ஐயனார் கோயில்.
காலம்—பகல்.

*கிணறு ஒரு புறம். மற்றொருபுறம் நடுவில் ஒரு மேடையும் அதைச் சுற்றிலும் எழுமேடைகளும். நடுவிலிருக்கும் பெரிய மேடையின் மீது வீழ்ந்து காசிமன்னன் தேம்பி அழுது கொண்டிருக்கிறார்.*

ந. பி. [அவர் பக்கலில் உட்கார்ந்து அவரைத் தேற்றி] மைத்துனரே! இதுவரையில் எவ்வளவோ மனதைரியத்துடனிருந்து எனக்குத் தேறுதல் சொல்லிக்கொண்டு வந்த தாங்களே இப்படி துயரத்திற்கு இடம்கொடுத்தால்—நான் தங்களுக்கு என்ன ஆறுதல் சொல்லக் கூடும்?

கா. [எழுந்திருந்து] பல வருடங்களுக்கு முன், ஒரு முறை, "கடந்த ஞானியரும் கடப்பரோ மக்கள் மேற் காதல்" என்கிற வாக்கியத்தைக் கேட்டு, அது என்ன அவ்வளவு கஷ்டமா என்று ஏசினேன்! அதனுண்மையை இப்பொழுது அறிகிறேன். [மறுபடி தேம்பி அழுகிறார்.]

ந. பி. மைத்துனரே, உமது மனதை தேற்றிக்கொள்ளும் சற்று—இவ்வுலகில் சர்வேஸ்வரன் ஆக்கினைப்படி சகலமும் நடக்கிறது— அதைமாற்ற நம்மால் ஆகுமா?

கா. எல்லாம் ஈசன் ஆக்ஞாபித்தபடி ஆகிறதா?—பார்க்கிறேன் அந்த உண்மையையும்—விஸ்வேசா! இனி என்னால் பொறுக்க முடியாது! உமது வாக்கையாவது மெய்யாக்கும்! இல்லாவிடின் இக்ஷணமே பொய்யாம் இம்மெய்யையும் உமது இணையடியிற் சேர்த்துக்கொள்ளும்—
[தன் தலையைத் தானே சேதிக்க வாளை வீசுகிறார்.]

ந. பி. க்ஷணம் பொறும்—மைத்துனரே! நானும் உம்முடன் வருகிறேன்! [தன் வாளையும் ஓங்குகிறார்; திடீரென்று அவர்களுக்கிடையில் சச்சிதானந்தர் தோன்றி அவர்கள் கரங்களைப்பற்றித் தடுக்கிறார்.]

ச. குழந்தைகளே!—கண் விழியுங்கள்!

[நல்லதங்காளும் அவளது மைந்தர்களும் துயில் நீத்தவர்களைப் போல் கற் பாறைகளின் மீது தோன்றுகின்றனர். காசிமன்னனும், நல்லதம்பியும் அவர்களை ஆலிங்கனம் செய்து கொண்டு ஆநந்த பரவசமாகின்றனர்.]

ந. பி. இதெல்லாம் கனவா?—நனவா?

கா. இல்லை! இல்லை!—ஈசன் கருணை!—ஸ்வாமி! உமது வார்த்தையை நம்பாது அபராத மிழைத்ததை மன்னியும்!

[சன்யாசி யருகிற் செல்ல அவர் மறைந்து பரமசிவம் ரிஷப வாஹன ரூடராய்ப் பார்வதியுடன் காட்சி கொடுக்கிறார்.]

எல்லோரும். [சாஷ்டாங்கமாய்ப் பணிந்து] பரமசிவம்! பரமசிவம்! பரமசிவம்!

ப. சி. குழந்தைகளே! நீங்கள் செய்த பூர்வ ஜன்ம பாபங்களெல்லாம் பரிஹரிக்கப்பட்டன. சீக்கிரம் காசிக்கு வந்து கங்கை நீராடி எம்மை வந்து தரிசியுங்கள்!

[புஷ்ப மழை பொழிகிறது; பரமசிவம் மறைகிறார்.]

காட்சி முடிகிறது.

—ooo—

## நான்காம் காட்சி

இடம்—காசி விஸ்வநாதர் கோயிலுக்கெதிரிலுள்ள மண்டபம்.

காலம்—பகல்.

காசிமன்னனும் நல்லதங்காளும், நல்லதம்பிக்கும் கனகாம்புஜத்திற்கும் விவாஹம் நடத்தி வைக்கிறார்கள். மௌனக் காட்சி.

காட்சி முடிகிறது.

—ooo—

நாடகம் முற்றிற்று.